# சிவாஜி

7–4–46



ராஷ்டிரபதி ஆஜாத்

The 'Shivaji' Weekly மலேயாவில் அணா 3 Published Every Sunday

# அதிசயம் ஆனால் உண்மை!

### பொத்தானை அழக்கினல் பறக்கலாம்

நான்கு எஞ்சின் கொண்ட மிகப் பெரிய விமானத்தைச் செலுத்துவதற்கு ஒரு பொத்தானை அமுக்கினால் போதுமென்ற காலம் வந்து விட்டது.

இனிமேல் விமானி செய்ய வேண்டிய வேலையெல்லாம் இது தான். விமான நிலையத்தின் ஓடு பாதையொன்றின் கோடியில் தமது விமானத்தைக் கொண்டு போய் நிறுத்தவேண்டும். விமானத்தில். போய்ச் சேரவேண்டிய இடங்களைக்குறிப்பிடும் பொத்தான்கள் வரிசையாக இருக்கும். விமானி தாம் போய்ச்சேர வேண்டிய இடத்தைக் குறிக்கும் பொத்தானை அமுக்கிவிட்டுச் சுகமாக உட்கார்ந்து கொண்டுவிடலாம். விமானம் தானாகவே பூமியிலிருந்து கிளம்பி, குறிப்பிடப்பட்ட இடத்திற்குப் போய்த் தானாகவே தரையில் இறங்கிவிடும்.

ஆர். ஏ. எப்.பையும் விமான உற்பத்தி மந்திரி சபையையும் சேர்ந்த நிபுணர்கள், லங்காஸ்டர் விமானங்களைக்கொண்டு நடத்திய பரீட்சைகளினாலேயே இந்தப்புதிய முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

### நம்பரைச் சுற்றினல் கார் வந்து சேரும்

லண்டன்நகரில் வெடிகுண்டுக்கு இலக்கான ஒரு இடத்தில் மோட்டார் கார்களை நிறுத்துவதற்கு நூதன முறையில் பிரம்மாண்டமான மைதானம் ஒன்றை அமைக்கப்போகிறார்கள். இந்த மைதானம் மொத்தத்திலும் கார்கள்வந்து நிற்பதையும் திரும்பிச் செல்வதையும் ஒரே ஆள் ஒரு சுழல் வட்டு விசையைக்கொண்டு நிர்வகிப்பார்.

இந்த மைதானத்தில் கார்களை ஒன்றன் பின் ஒன்றாகவும் நிறுத்தி வைக்கலாம். மோட்டாரை ஓட்டுபவர் அந்த மைதானத்திற்குள் நேராகத் தமது காரை ஓட்டிச் சென்று வரிசையில் காலியாயிருக்கும் இடத்தில் நிறுத்திவிட்டுச் சென்றுவிடுவார். அவர் திரும்பி வரும்போது, அங்கிருக்கும் சிப்பந்தி சுழல் வட்டில் வேண்டிய காரின் நம்பரைச் சுற்றுவார். உடனே அந்தக் கார், மைதானத்தில் நிறுத்திவைக்கப்பட்டிருக்கும் மற்ற கார்களின்மீது படாமல் தானாகவே, புறப்படவேண்டிய இடத்திற்கு வந்து சேர்ந்துவிடும். இந்தப் புதிய மைதானத்தில் சுமார் 300 கார்கள் நிறுத்தலாமாம்.

### உலகத்திலேயே மெல்லிய குழாய்

உலகத்திலேயே மிகச்சிறியதும் இலேசானதுமான குழாய்ஒன்றை பிரிட்டிஷ் எஞ்சினியர்கள் இப்பொழுது உற்பத்தி செய்திருக்கின்றனர். இந்தக் குழாயின் வெளிப்புறக் குறுக்களவு ஒரு அங்குலத்தில் ஆயிரத்தில் 6 பாகம்; துவாரத்தின் குறுக்களவு ஒரு அங்குலத்தில் பத்தாயிரத்தில் 35 பாகம்.

இதிலுள்ள விசேஷமென்னவென்றால், இந்த முறையை அனுசரித்து உடலில் மருந்து செலுத்துவதற்கு வேண்டிய நுட்பமான வைத்திய ஊசிகள் செய்யலாம். யுத்தத்திற்கு முன்பு இந்த ஊசிகள் உற்பத்தி செய்வதில் ஜெர்மனியே முதன்மையாக இருந்தது.

ரசாயனசாலையில் மாணவி பரிசோதனைகள் நடத்துகிறாள்.

## பூந்தோட்டங்களில் காய்கறி பயிரிடுக

உணவுப்பொருள் உற்பத்திக்கு உதவக்கூடிய நிலம் ஒரு துண்டு இருந்தாலும் சரி, அதைக் கூட தரிசாக விட்டுவைக்கக் கூடாது. கோடையில் தோட்டங்கள் வைத்து வளர்ப்பது பற்றி இதோ சில ஆலோசனைகள் :—

பூக்களுக்குப்பதில் ஏன் காய்கறிகள் உற்பத்தி செய்யக்கூடாது? புஷ்பப் பாத்தி ஒவ்வொன்றிலும் ஏதாவது ஒரு காயோ கீரையோ பயிரிடமுடியும்; வேறொன்றுமில்லாவிட்டால், பசலையாவது பயிரிடலாம். ரோஜா பாத்திகளிலேகூட ஓரங்களில் இந்தக்கீரை பயிராகும்.

வேலிகளிலும், புதர்களிலும், புடல், பீர்க்கன், பாகல், சுரை முதலிய காய்களைப்பயிரிடலாம்; ஆனால் மரங்களின்கீழ் மாத்திரம் இவைகளைப் பயிரிடக்கூடாது.

காய்கறிகள் பயிரிடுவதுபற்றிச் சிலகுறிப்புகள் தரப்படுகின்றன :

ஓரடி ஆழத்திற்கு பூமியைக் கொத்துங்கள். உரமாக மக்கிய சாணம், சாக்கடை மண் அல்லது மக்கிய குப்பைகூளத்தை எருவாகப்போடுங்கள். இவையெல்லாம் நல்ல உரமாகும். 20 அடிக்கு 20 அடி நிலத்துக்குச் சுமார் 30 கூடை எரு போதும். மூன்று நான்கு நாட்களுக்கொருமுறை ஒழுங்காகத் தண்ணீர் பாய்ச்சுங்கள். மாலையில் பாய்ச்சுவது மிகவும் நல்லது.

காய்கறி பயிரிடும் முறை பற்றி ஒரு சிறு புத்தகத்தை விவசாய இலாகா கூடியசீக்கிரம் வெளியிடப்போவதாகத் தெரிகிறது.

புது டில்லியில் சர்க்காரே இந்த முறையைப் பரீக்ஷார்த்தமாகக் கையாளுகிறார்கள்.

புது டில்லியில் இந்திய சர்க்கார் காரியாலயக் கட்டிடங்களுக்கு எதிரில் சுமார் ஒரு மைல் நீளத்துக்கு வியாபித்திருக்கும் புல் தரையில் இப்பொழுது காய்கறி பயிரிடப் போகிறார்கள். நிலத்தை உழுவதற்காக யந்திரக் கலப்பையொன்றும் வாங்கியாய்விட்டது. புது டில்லியிலிருக்கும் மற்ற திறந்த வெளிகளையும் உணவு உற்பத்திக்குப் பயன்படுத்திக் கொள்வது பற்றி புதுடில்லி உணவுப் பெருக்கக் கமிட்டி ஆலோசித்துவருகிறது.

தோட்டங்களில் புஷ்பச் செடிகளுக்குப் பதிலாக காய்கறிகள் பயிரிடவேண்டிய அவசியத்தை எடுத்துக் காட்டி, தொழிலாளர் இலாகா எஸ்டேட் ஆபீஸர் சர்க்கார் பங்களாக்களில் குடியிருப்பவர்களுக்குக் எழுதியிருக்கிறார்.

புதுடில்லி உணவுப் பெருக்கக் கமிட்டி, காய்கறிகளை அதிகமாய் உற்பத்தி செய்யும்படி தூண்டுவதற்காகப் பிரசுரங்களுக்கு ஏற்பாடு செய்து, வீடு வைத்திருப்பவர்களுக்கு கிரியாம்சையில் உதவிகள் புரியுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதற்கென நியமிக்கப்பட்டிருக்கும், விவசாயப் பட்டதாரிகள் இரண்டுபேர், எந்தெந்தக் காய்கறிகளை உற்பத்தி செய்யலாம், உரம், விதை முதலியவற்றை எவ்விதம் பெறுவது என்பன போன்ற விஷயங்களை ஜனங்களுக்கு விளக்கிக் கூறுவார்கள்.

# சிவாஜி

ஆசிரியர்: டி. சிவஞானம்

மாலை 11 | திருச்சி. 7—4—46 பார்த்திப, பங்குனி, 25உ. | மணி 20




# தூது வந்திருக்கும் துரைகளின் போக்கு

## உடனடியாக நடக்கப்போவதென்ன? ஒற்றுமை முயற்சியா, அதிகார மாற்றமா?

லண்டன் மாநகரிலிருந்து பறந்து வந்திருக்கும் மந்திரிகள் சாங்கோபாங்கமான சம்பாஷணைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்திய அரசியல் சிக்கலைத் தீர்த்துவைக்கும் நோக்குடன் அவர்கள் சந்திக்காத பிரமுகர்கள் கிடையவே கிடையாது. இந்தியாவிலிருக்கும் ஒவ்வொரு தனி நபரையும் அவர்கள் சந்திக்க ஆசைப்பட்டால்கூட அதிசயம் இல்லை.

இந்த சம்பாஷணைகளுக்கும் இந்தியப் பொதுமக்களுக்கும் உண்மையான சம்பந்தம் ஏதாகிலும் உண்டா, ஆலோசனைகளின் பலனாய் ஏற்படப்போகும் முடிவுக்கும் இந்த நடவடிக்கைகளுக்கும் ஸ்னனப் பிராப்தியாவது இருக்குமா என்பதே நம்முடைய கேள்வி.

இந்திய அரசியலின் குழப்பங்களும், முடிச்சுகளும் இந்த மந்திரிகளின் கண்முன்னே வரவரப்பெரிதாகிப் பயங்கரமாக வளர்ந்து வருவது போல் தோன்றுகிறது. அவர்களுடைய நல்லெண்ணத்தில் நமக்கு நம்பிக்கை இருக்கிறது. அவர்களுடைய செயலிலிருந்துதான் நமது வருங்காலத்தைப்பற்றி நாம் நம்பிக்கையோ, அவநம்பிக்கையோ கொள்ள வேண்டும்.

**"வெள்ளைக்காரன் பொறுப்பு"**

சென்ற இதழில் பிரதம மந்திரி ஆட்லியின் சொற்பொழிவைப் பற்றி எழுதியிருந்தேன். அதற்கப்புறம் பெதிக் லாரென்சும், ஸ்டாபோர்ட் கிரிப்சும்கூட இந்தியா வந்திறங்கிச் சொற்பொழி வாற்றிவிட்டார்கள்.

ஆலோசனைகள் இன்னும் ஆரம்ப நிலையிலேயேதான் இருக்கின்றன என்பது இந்தச் சொற்பொழிவுகளிலிருந்துதெளிவாகிறது

பிரதம மந்திரி ஆட்லியின் சொற்பொழிவுக்கும், லாரென்ஸ், கிரிப்ஸ் இவர்களது பேச்சுக்கும் ரொம்ப வித்தியாசமிருக்கிறது. ஆட்லி துரை லண்டனிலிருந்து பேசினார். இவர்கள் இந்திய மேடையில் பேசியிருக்கிறார்கள். சாம்ராஜ்ய வாடையிலிருந்து விலகி யிருந்து பேசினார் ஆட்லிதுரை. மற்ற இருவரும் அந்த வாடைக்குள்ளிருந்து கொண்டு பேசியிருக்கிறார்கள்.

லாரென்சும், கிரிப்சும் இரண்டு நூற்றாண்டுகளாக வாழ்ந்திருக்கும் "வெள்ளைக்காரன் பொறுப்பு" (White Man's burden) என்ற பதத்துக்கு முழு அர்த்தம் கொடுக்கிறார்கள். அவர்களுடைய சம்பாஷணைகள் இதைத் தெளிவு படுத்துகின்றன. அவர்களது லட்சியம் இன்னும் அவர்கள் கண்முன்னே தெளிவாக இருக்க வேண்டுமே என்பதுதான் கவலை

**கிரிப்ஸ் துரையின் பேச்சு.**

ஏப்ரல் மாதம் முதல்தேதியன்று பத்திரிகைக்காரர்கள் மகாநாட்டில் கிரிப்ஸ் துரை பேசினார். பெதிக் லாரென்சின் சொற்பொழிவுக்கும் இவருடைய பேச்சுக்கும் அதிக வித்தியாசமில்லை.

கிரிப்ஸ் துரையின் சொற்பொழிவைப் பின் வருமாறு சுருக்கமாகப் பிரித்து ஆராயலாம்:—

(1) பிரிட்டிஷ் அரசாங்கம்தயாராக ஏதோஒருதிட்டத்தை முன்கூட்டியே வரைந்து மூட்டை கட்டிக்கொண்டு வந்திருக்கிறதென்று உலாவும் வதந்திகளை அவர் முழு வேகத்துடன் மறுத்தார்.

(2) எல்லா கட்சிகளும், அபிப்பிராயங்களும் ஐக்கியப்பட்டு ஒரே முடிவுக்கு வரவேண்டும் என்று அவர் விரும்புகிறார்.

(3) இன்னும் இரண்டு மூன்று வாரங்களுக்குள் திட்டமான முடிவுகள் வெளியிடப்படும் என்று அவர் அறிவிக்கிறார்.

(4) பிரிட்டிஷ்சேனை பரிபூர்ணமாக வாபஸாகிவிடுமென்று உறுதி கூறுகிறார்.

(5) அபிப்பிராயங்கள் ஒத்துப் போகாமல், பேச்சுக்கள் முறிந்தாலும்கூட தற்காலிக மக்கள் அரசாங்கம் நிறுவப்படுமா என்றகேள்விக்கு கிரிப்ஸ் பதில் கூறவில்லை.

(6) பேச்சுக்கள் முறிந்தால் சர்வதேச மகா சபையிடம் முறையிடுவதும். மாகாண எல்லைகளை மாற்றி அமைப்பதும் மாற்று யோசனைகளாக இருக்கலாம் என்கிறார் கிரிப்ஸ்.

(7) பிரிட்டிஷ் அரசாங்கம் தற்போது இந்திய அரசியலிடம் காட்டும் கவனமும், கருணையும், எந்தசர்வதேச சம்பவத்தோடும் சம்பந்தப்பட்டதல்ல என்று கூறியிருக்கிறார், சமாதான தூதர்.

**சிறிய ஆராய்ச்சி.**

எந்தக் குறிப்பிட்ட திட்டத்தையும் இந்தத் தூதர்கள் மூட்டை கட்டிக்கொள்ளாமல் வந்திருப்பது பாராட்டத்தக்க விஷயமாக இருக்கலாம். ஆனால் எந்தக் குறிப்பிட்ட திட்டமான முடிவுக்கும் இவர்கள் துணிந்து வராமல் போனால் அதன் பலன் எப்படியிருக்குமோ என்பதே மக்களின் கவலை.

எல்லா கட்சிகளும், அபிப்பிராயங்களும் ஒரே முடிவுக்கு வருவது என்பது நடக்காத காரியம். மனிதன் வாசம் செய்யும் எந்த இடத்திலும் இது சாதகமில்லை. இப்படி எல்லா அபிப்பிராயங்களும் ஒன்றுபட்டுத்தான் எல்லா அரசாங்கங்களும்வெற்றிகரமாக வேலை செய்கின்றன என்று சொல்லமுடியாது. ஒன்றுபடாததனால் வெற்றிகரமாக வேலை செய்ய முடியாது என்று சொல்வதும் தவறு.

## ஏகாதிபத்திய வாடை இன்னும் மாறவில்லை

### மகுடாதிபதிகள் மனக் கலக்கம்

★

ஒன்றுபடுவதன் நலனையும் பெருமையையும், சௌகரியத்தையும் நாம் ஒப்புக்கொள்கிறோம். ஆனால் ஒன்று படுவதன் சாத்தியத்தைப் பற்றி சந்தேகம்தான். இந்த அனுபவம் நமக்கு ஏற்கனவே உண்டு. ஒற்றுமையை எதிர்பார்த்து தூது கோஷ்டி வந்திருந்தால் அதில் யாருக்கும் அக்கரையில்லை. இப்போதே ஜின்னா தன் சுயரூபத்தைக் காட்ட ஆரம்பித்துவிட்டார். அவர் தான் ஒரு இந்தியனே அல்லவென்று கூறியிருக்கிறார்.

பேச்சுக்கள் முறிந்தால் என்ன நடக்கும் என்ற கேள்விக்கு கிரிப்ஸ் துரை சாதிக்கும் மௌனம் ருசிகரமாகப் படவில்லை. கிரிப்ஸ் துரையின் லட்சிய மனப்பான்மையும், பேச்சுக்கள் கட்டாயம் வெற்றி பெறும் நம்பிக்கையும்தான் இந்த மௌனத்திற்குக் காரணம் என்று ஒப்புக் கொள்ள முடியவில்லை. இந்தியாவுக்கு சுதந்திரம் கொடுக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பவர்களுக்கு இதைப் பற்றித் தெளிவாகப் பேசுவது சிரமமான காரியமில்ல.

பேச்சுக்கள் முறிந்தால் சாவதேச மகாசபையிடம் முறையிட

(6-ம் பக்கம் பார்க்க.)

# கோட்டை வாசலில்

**கோத்தவால்**

1946-ம் வருஷம் மார்ச் மாதம் 24ந் தேதி இரண்டு விதத்தில் முக்கியமான தினம் என்று சொல்லலாம். இந்தியாவின் அரசியல் குழப்பத்தைத் தீர்த்து, சுயராஜ்யத்தைக் கொடுப்பதாகக் கங்கணம் கட்டிக்கொண்டு பிரிட்டிஷ் மந்திரிகள் மூன்றுபேர் தலைநகரத்தை அடைந்த தினம் மார்ச் 24ந்தேதி. அவர்கள் இந்நாட்டில் காலடிவைத்த நல்ல முகூர்த்தத்தில் காலடிவைத்திருக்கவேண்டு மென்பதே எல்லோருடைய பிரார்த்தனையுமாகும். பார்லிமெண்டரி தூதுகோஷ்டியை அடுத்து மந்திரிசபை தூதுகோஷ்டி வந்ததிலிருந்தே பிரிட்டிஷாருக்கு அதிகாரத்தை மாற்றுவதற்கு மனம் வந்துவிட்டாற் போலிருக்கிறது என்று நினைக்க இடம் கொடுக்கிறது. அத்துடன் பிரதம மந்திரி அட்லி நிகழ்த்திய பிரசங்கம் எல்லோர் மனதிலும் நம்பிக்கையைத் தூண்டிவிட்டிருக்கிறது. எப்படியாவது சமரஸம்செய்து இந்தியாவின் கையில் ஆட்சி முறையை ஒப்படைத்துவிட்டு பிரிட்டிஷார் தங்கள் நாட்டிற்கு கப்பலேறிவிட்டார்களானல், மந்திரிகள் தலைநகரத்தில் கால்வைத்த தினமாகிய மார்ச்சு 24ந் தேதி ஒரு முக்கியமான நாளே ஆகும்.

மார்ச்சு 24ந் தேதியை முக்கியமாகக் கருதுவதற்கு இரண்டாவது காரணம், நமது காலஞ்சென்ற திரு. சத்தியமூர்த்தி அவர்கள் ஞாபகார்த்த நாள் இதுதான். தமிழ் நாட்டின் மாபெரும் தலைவர் நம்மைவிட்டுப் பிரிந்து 3 வருஷங்கள் ஆய்விட்டன என்று நினைக்கும் போது நமக்கே பிரமிப்பாய் இருக்கிறது. தலைநகரத்தில் சட்டசபைக் கூட்டம் நடக்கும்போதெல்லாம் நம் அருந்தலைவர் தியாகி சத்தியமூர்த்தியின் நினைவுதான் எல்லோர் உள்ளத்திலும் எழுகிறது. தமிழ் நாட்டின் கௌரவத்திற்கே சிகரம் போல் விளங்கிய வாக்குப் போர் தீரர் சத்தியமூர்த்தி தேகவியோகம்ஆகி சரியாக மூன்று வருஷங்கள் ஆய்விட்டன. அந்த தன்னலமற்ற தியாகிக்கு நாம், தமிழர்களாகிய நாம் என்ன செய்துள்ளோம்? ஒன்றுமில்லை என்பதை நாம் வெட்கத்துடன் ஒப்புக்கொள்ளவேண்டியதுதான். இதே தீரர் வடநாட்டில் பிறந்திருப்பாராயின் அவர் பெயரில் ஒரு மாளிகையோ, தர்மசாலையோ, நூல்நிலையமோ, ஆலயமோ கண்டிப்பாய் எழும்பியிருக்கும். வடநாட்டவர் அவர்கள் தலைவர்களை அவ்விதம் கௌரவிக்கிருர்கள், போற்றுகிருர்கள்! ஆனல் நாம் என்ன செய்கிறோம்? "சத்தியமூர்த்தியா? அவர் பெரிய தேசத் தியாகி ஆயிற்றே, தேசத்திற்காகவே உயிரைக் கொடுத்தார் ஸார்!" என்று வாய் நிறைய அனுதாபச் சொற்களுடன் நிறுத்திக் கொள்கிறோம். தேசபக்தியிலோ, சுதந்திர ஆர்வத்திலோ, தியாகத்திலோ தமிழ் நாடு எந்த விதத்திலும் வட நாட்டிற்குக் குறைந்ததல்ல! ஆனல் ஒரே ஒரு குறை, நாம் நமது தலைவர்களின் அருமை பெருமைகளை பிரசாரம் செய்வதோடு நிறுத்திக்கொள்கிறோமே தவிர கிரியாம்சையில் உருப்படியாக ஒன்றும் செய்ய வேண்டுமென்ற ஆர்வம் பிறப்பதில்லை.

நமது தேசிய கவி பாரதியாருக்கே இப்பொழுதுதானே ஞாபகச்சின்னம் கட்ட ஆரம்பித்திருக்கிறோம்! அப்படியிருக்கையில் மூன்று வருஷத்திற்கு முன்னல் இறந்த சத்தியமூர்த்தியைப்பற்றிக் கேட்பானேன்!

ஆனல், உண்மையில் இப்பொழுது தமிழ் நாட்டில் நமது தலைவர்களையும், பெரியார்களையும், கவிகளையும் போற்ற வேண்டும்; ஞாபகார்த்த சின்னங்கள் ஏற்படுத்த வேண்டும் என்ற ஆர்வம் உதயமாகி விட்டது. அதுமேன்மேலும் பெருகவேண்டுமென்பதே நமது பிரார்த்தனை. திரு. சத்தியமூர்த்திக்கும் ஒரு ஞாபகார்த்த சின்னம் அமைக்க வேண்டுமென்று முயற்சிகள் நடைபெறுவதாகஅறிகிறேன். அந்தமட்டில் சந்தோஷம்.

திரு. காமராஜ் நாடார் அவர்கள் மார்ச்சு மாதம் 24ந் தேதியை சத்தியமூர்த்தி ஞாபகார்த்த தினமாகக் கொண்டாடும்படி பத்திரிகைகளில் அறிக்கைவிடுத்திருந்தார். அதைப் பயன்படுத்திக்கொண்டு 'டில்லித் தமிழ்ச் சங்கம்' திரு. சத்தியமூர்த்தி தினத்தைக் கொண்டாடியது.

டில்லியில் சுமார் நாலாயிரம் தமிழர்கள் இருக்கிருர்கள். இவர்களில் ஒரு பத்துப்பேர்களுக்காவது நமது மாபெரும் தலைவரை நினைத்து ஒரு காரியம் செய்யத் தோன்றவில்லை என்றல் அது ஆச்சரியம்தானே? அவரவர்களுக்கு பொழுது விடிந்து பொழுது போனல் ஆபீஸ் கவலைகளும், ரேஷன் கவலைகளும் இருப்பது சகஜம். அவற்றில் இறந்துபோன தலைவரின் தேகவியோக தினத்தை ஞாபகம் வைத்துக்கொள்வது கடினம் தான்!

திரு. காமராஜின் அறிக்கையினல் 'டில்லித் தமிழ்ச் சங்கம்' சத்தியமூர்த்தி தினத்தைக் கொண்டாடியதுபோற்றத்தக்கது. தென்னிந்திய கிளப்பில் சங்கீதக் கச்சேரி ஒன்று ஏற்பாடு செய்திருந்தபடியால் சத்தியமூர்த்தி கூட்டத்திற்கு 40 பேருக்குமேல் வரவில்லை! நமது தலைவர்கள்மீது என்ன அபிமானம் பாருங்கள்!

'டில்லித் தமிழ்ச் சங்கம்' பிறந்து ஒருமாதம்கூட ஆகவில்லை. அதற்குள் ஒரு தேச பக்தரின் ஞாபகார்த்த தினத்தை கொண்டாட காரியங்கள் நடத்துவதென்றல் சாமான்யமில்லை. சனிக்கிழமை காலை (23ந் தேதி) 6-மணிக்கு திரு. காமராஜின் அறிக்கையை பேப்பரில் பார்த்தபிறகு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்றல் பார்த்துக் கொள்ளுங்கள்.

சரி கூட்டம் நடத்திவிடலாம். திரு. சத்தியமூர்த்தியைப் பற்றி அநுபவபூர்வமாகப் பேசுவதுயாா? சத்தியமூர்த்தி பெரிய பேச்சாளர் என்பது எல்லாருக்கும் தெரியும். அவர் புரிந்துள்ள மகத்தான சேவைகளும் அரை குறையாய்த் தெரியும். அதை வைத்துக்கொண்டு பேசிவிடமுடியுமா? இந்தப் பிரச்னையை நடைபெறும் மத்திய சட்டசபைக் கூட்டம் தீர்த்துவைத்தது. எந்த சட்டசபையில் திரு. சத்தியமூர்த்தி ஸிம்ம கர்ஜனை புரிந்தாரோ, அந்தச் சட்ட சபையில் தமிழ்நாட்டின் பிரதிநிதிகளாக இன்று இருந்து வரும், திரு. டி. வி. சடகோபாச்சாரி கூட்டத்திற்குத் தலைமைவகிக்கவும், திரு. எஸ். டி. ஆதித்தியன் வெங்கடசுப்பா ரெட்டி ஆகிய இருவரும் பிரசங்கம் புரியவும் ஒப்புக்கொண்டார்கள். அது சத்தியமூர்த்தியின் மகிமையே தவிர வேறு ஒன்றுமில்லை. மத்திய சட்டசபைக் கூட்டம் நடைபெறக்கொண்டுதானே இவர்களை தேடிப் பிடிக்க முடிந்தது?

மூன்று பேரும் திரு. சத்தியமூர்த்தியின் குணதிசயங்களையும், திறமைகளையும், வாக்குச்சாதுர்யத்தையும், கம்பீரமான குரலோசையையும் பற்றி சிலாகித்து அழகாகப் பேசினர்கள். முக்கியமாக திரு. ஆதித்தியன் பேசும்போது சபையினர் உணர்ச்சி வசப்பட்டுப் போனர்கள்.

1300 மைல்களுக்கப்பால் உள்ள டில்லித் தமிழர்கள் ஒரு தேசபக்தரின் ஞாபகார்த்த தினத்தைக் கொண்டாடி தமிழ் நாட்டின் கௌரவத்தை சீர்தூக்கச் செய்த பெருமை டில்லித் தமிழ்ச் சங்கத்தையே சாரும். குழந்தைப் பருவத்தில் இருக்கும் இச் சங்கம் தமிழுக்கு இடையருத தொண்டு ஆற்றும் வகையில் அது சீரும் சிறப்புமாக வளர்ந்தோங்க தமிழர்களின் ஆசியைக் கோரி நிற்கிறது.



திரு. எஸ். சத்யமூர்த்தி





விமானம், கப்பல் இவற்றைத் துரிதப்படுத்தும் புதுமுறைக் கருவி

தமிழ் முழக்கம் "கஜமுகன்"

# டில்லியில் தமிழ்ச் சங்கம்

★

தமிழுக்கு இப்பொழுது அமோகமான யோகம் பிறந்திருக்கிறது. அது தமிழ்நாட்டில் மட்டுமல்ல தமிழர் உள்ள இடங்களிலெல்லாம்தான். தமிழிலே பேசவேண்டும், தமிழிலே எழுதவேண்டும், தமிழையே படிக்கவேண்டும் என்ற ஆர்வம் ஒவ்வொரு தமிழன் உள்ளத்திலும் இப்பொழுது பிறந்திருக்கிறது அந்த ஆர்வத்தின் பிரதிபலிப்பாக தமிழர் உள்ள இடங்களிலெல்லாம் தமிழ் சங்கங்கள் எழுகின்றன. வட இந்தியாவின் பிரதான நகரங்கள் ஒவ்வொன்றிலும் தமிழர்கள் ஏராளமாக வசிக்கின்றனர். அங்கெல்லாம் தமிழ் சங்கங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

டில்லியிலும் அம்மாதிரி தமிழ்ச் சங்கம் ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. இச்சங்கம் தமிழர்களுக்கென்றே ஏற்பட்டது. தமிழை வளர்ப்பதற்காக உருவானது. தமிழ்நாட்டவருடன் தொடர்பு வைத்துக்கொண்டு தாய்மொழியை மறக்காமல் போற்ற அமைக்கப்பட்டது.

டில்லியில் ஏற்கனவே 'தென்னிந்திய சங்கம்' என்று ஒன்று இருக்கிறது. ஆனால் அது தென்னிந்தியர் அனைவருக்கும் பொதுவான சங்கம். அச்சங்கத்தில் தமிழர்கள் பெரும்பான்மையாக இருந்தாலும் தமிழைமட்டும் தனியாக வளர்ப்பது என்பது ஒரு தாய் தன்னுடைய குழந்தைகளில் ஒன்றைமட்டும் செல்லமாக வளர்ப்பதுபோல் ஆகும். தமிழுக்கென்று அதிகம் சலுகை காட்டி தொண்டாற்றுதல் அவ்வளவ சாத்தியமானதாகப் படவில்லை. ஆதலால் தமிழ் சங்கம் என்றே தனியாக ஒன்றை சில இளைஞர்கள் கூடி ஆரம்பித்துள்ளார்கள்.

இச்சங்கம் மார்ச்சு மாதம் 18ந்தேதி தென்னிந்தியா கிளப்பில் அரங்கேற்றப்பட்டது. 'அரங்கேற்றம்' என்ற வார்த்தையைக் குறிப்பிட்டதின் காரணம் அச்சங்கம் மறைவாக இரண்டு மாதங்கள் வளர்ந்துவந்ததுதான்.

அறையில் ஆடித்தானே அம்பலத்திற்கு வந்தாகவேண்டும்? அதுபோல் இச்சங்கம் வெற்றியுடன் நடைபெறுமா, ஆதரவு கிடைக்குமா என்று பரிசோதனைசெய்ய வேண்டியிருந்தது, அறைக்குள் வளர்ந்த குழந்தையைப்பரிவுடன் ஆதரிக்க அநேகம் பேர் முன்னுக்கு வந்தனர். குழந்தை இரண்டு மாதத்திற்குப் பூர்ண வளர்ச்சிபெற்றுப் பொலிவுடன் திகழ ஆரம்பிக்கவே, அதை மறைத்துவைத்துக்கொண்டிருப்பதில் பிரயோஜனமில்லை எனக் கருதி பகிரங்கமாகக் கொண்டுவரப்பட்டது. இனிமேல் இச்சங்கம் பொதுமக்கள் சொத்து. அதன் வளர்ச்சியின் பொறுப்பு தமிழர்களைச் சார்ந்தது

மார்ச்சு மாதம் 18ந்தேதி நடந்த முதல் கூட்டத்தில் சங்கத்தின் நிர்வாகிகள், தலைவர்கள் எல்லோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர் எஸ். சுப்ரமண்யம் எம்., ஏ., அவர்கள் தலைவர். ஏ. வி. ஒய். நாராயணன், ஸ்ரீமதி ராதாபாய், இருவரும் உபதலைவர்கள் ஏ. வி. குப்புசாமி, பொதுக்காரியதரிசி. மற்றும் ஐந்துபேர் நிர்வாகிகள்.

மேற்கண்டவர்களுடைய முயற்சியினால் இச்சங்கம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தோங்கும் என்பதில் சந்தேகமில்லை.

சங்கத்தின் திட்டங்கள் அமர்க்களமாய் இருக்கின்றன. கம்பராமாயணம் அல்லது திருக்குறள் வகுப்பு நடத்துதல் (வாரம் இருமுறை) மாதம் ஒருமுறை சொற்பொழிவுக்கூட்டம். சிறுவர்களுக்கான தமிழ் வகுப்புக்கள். வ. உ. சிதம்பரம் பிள்ளை, டாக்டர் வே. சாமிநாதய்யர் இவர்களது ஞாபகார்த்த நிதிக்குப் பணம் திரட்ட நாடகங்கள் நடித்தல், தமிழில் வியாசப் போட்டி, சொற்பொழிவுப் போட்டி இவைகளை சிறுவர்க்கும், சிறுமியர்க்கும் நடத்திப் பரிசு வழங்குதல்.

கம்பர் தினம், வள்ளுவர் தினம் இவைகளைக் கொண்டாடுதல். தமிழ்நாட்டிலிருந்து தமிழ்ப் பெரியார்கள் டில்லிக்கு விஜயம் செய்யும்போது அவர்களைக்கொண்டு பிரசங்கங்கள் ஏற்பாடு செய்தல்.

சங்கத்தில் நிருவப்பட்டிருக்கும் வாசகசாலையை நன்கொடை வசூல்செய்து பலப்படுத்துதல்.

தமிழில் ஆர்வமுடையவர்களைக் கொண்டு மாதம் ஒருமுறையோ அல்லது மூன்று மாதமொருமுறையோ கையெழுத்துப் பிரதி சஞ்சிகை வெளியிடுதல்.

கூடிய சீக்கிரம் சங்கத்தின் காரியங்களை நடத்த ஒரு இடம் சம்பாதித்தல்.

மேற்கண்ட பத்துக காரியங்களும் தீர்மானமாக அக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டன.

தமிழ் வளர்ச்சிக்கு இத் தீர்மானங்கள் எவ்வளவு பயனளிக்கக்கூடியது என்பதை வாசகர்கள் அறிவார்கள். உலகெலாம் தமிழ் மொழியைப் பரப்ப வேண்டும். எட்டுத் திக்கிலும் தமிழின் நாதம் ஒலிக்கவேண்டும் என்ற நமது அமர கவி சுப்ரமண்ய பாரதியாரின் கவிவாக்கு எவ்வளவுதூரம் பலிதமடையப் போகிறது என்பதற்கான அறிகுறிகள் இத்தமிழ் சங்கங்கள்.

கூட்டத்தில் ஒரு சிலர் இதையேன் தென்னிந்திய சங்கத்தின் கிளை ஸ்தாபனமாக்கக்கூடாது என்று யோசனை சொன்னார்கள். அது கூடாது என்பதே என் கட்சி. செல்வாக்கு மிகுந்த அந்த ஸ்தாபனத்துடன் இச்சங்கம் சேருவதால் ஒருவித நலனும் ஏற்படாது. தமிழ் தனியாட்சி செலுத்தும் பாஷை. அதற்குத் தனியான சங்கம் இருக்கவேண்டியது அவசியத்திலும் அவசியம். தென்னிந்திய சங்கத்துடன் அது சேருவதினால் தமிழ்த் தொண்டின் உத்வேகம் குறையத்தான்செய்யும்.

இந்த நவஜீவனுக்கு தென்னாட்டுத் தமிழர்களின் ஆசியையும் அன்பையும் கோருகிறார்கள். தமிழ்ச் சங்கத்தின் வாசகசாலைக்கு தமிழ் அன்பர்கள் புஸ்தகமாகவோ, பணமாகவோ நன்கொடை அளித்தால் மகிழ்ச்சியுடன் அதை வரவேற்கிறார்கள்.

இது என்னடா இவ்வளவு எழுதிவிட்டுக் கடைசியில் நன்கொடை வியாபாரத்திற்கு வந்துவிட்டானே என்று அன்பர்கள் சலிப்புறவேண்டாம். வடக்கே தமிழை வளர்க்க இவ்வளவு முயற்சி நடக்கிறதே என்ற பாராட்டு உணர்ச்சிகொண்டு உதவிசெய்ய முன்வருபவர்கள் வரலாம். கட்டாயம் இல்லை. அன்பர்களின் இஷ்டம் எதுவோ அதன்படி செய்யலாம். கொடை அனுப்ப விரும்புகிறவர்கள் கீழ்க்கண்ட விலாஸத்திற்கு அனுப்பலாம்:

A. V. KUPPUSWAMY,
General Secretary, the Delhi Tamil Sangam, New Madras Boarding House, Connaught Circus, New Delhi.

★

# சிவாஜி



அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கென்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினோம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. பார்த்திப-ளு பங்குனி-மீ 25-உ 7—4—46


## தூதுகோஷ்டியின் வேலை.

டில்லியில் தூதுகோஷ்டியினர் இந்தியாவின் பிரபலஸ்தர்களையும், கக்ஷிகளையும், மகுடாதிபதிகளையும் சந்தித்துப் பேசி வருகிறார்கள். வெறும் யூகங்களையும் செய்திகளையும் கொண்டு, தூதுகோஷ்டியின் முயற்சி பற்றிய வெற்றி தோல்விகளை நாம் கற்பனை செய்துகொள்ளப் போவதில்லை.

பிரிட்டிஷார் உண்மையிலேயே அதிகாரத்தை இந்தியருக்கு மாற்றிவிட மனப்பூர்வமாக முன் வந்திருக்கிறார்கள் என்ற நம்பிக்கையுடன் தான் நாம் அவர்கள் முயற்சியை மதிக்கிறோம்.

அந்த அடிப்படையின் மீது பார்த்தால், எந்த முட்டுக்கட்டையும் உடனடியான ஒரு ஏற்பாட்டுக்குத் தடையாயிராது. சர்வ கட்சிகளும், ஒத்துழைக்கக் கூடிய வரை முயற்சி செய்யப்படலாம். ஒத்து வந்தால் அந்த ஏற்பாட்டின் கீழ் ஒரு இடைக்கால மத்யசர்க்கார் பொது ஜனப்பொறுப்புள்ளதாக அமைக்கப்படலாம். ஒத்து வராவிட்டாலும் அதிகாரம், பொறுப்பேற்க முன்வரும் கக்ஷிகளிடம் ஒப்படைக்கப்படுவதில் சிரமம் இருக்காது. அதனால் ஏற்படக்கூடிய எதிர்ப்பையும் கசப்பையும் சமாளிக்க அந்த மத்ய சர்க்காருக்குப் பலம் இருக்கும்.

பிரிட்டிஷ் தூதுகோஷ்டியின் நல்லெண்ணத்தில் வழக்கம்போல் சந்தேகப் படுவதானாலும், அந்த சந்தேகம் உண்மையாக ஆகிவிட்டாலும் நிலைமை தோல்வியில் போய் முடியலாம். அதாவது பழையபடி பிரிட்டன் தன் பல்லவியை (அதாவது இந்தியர்களின் ஒற்றுமையின்மையை)ப்பாடிவிட்டு அதிகார மூட்டையைப் பிரிக்காமல், தாங்களே திரும்ப எடுத்துக் கொண்டு ஊர் போய் விடலாம். இப்படி நேருமானால் — அமுலிலிருக்கும் பொம்மை சர்க்காரோ, மற்றயாருமோ பொதுஜனஉணர்ச்சிவேகத்தை சமாளிக்க வேண்டிய பயங்கரமான நிலைமைக்கு ஆளாகவேண்டியிருக்கும்.

ஜின்னாவின்போக்கு நிலைமையை முற்றிலும் மோசமாக்கிக் கொண்டிருக்கிறது. அதைப் பொருட்படுத்தி பிரிட்டிஷ் மந்திரிகள் இந்தியப் பொதுக் கோரிக்கையை அலட்சியம் செய்வார்களென்று நாம் அனாவசியமாக சந்தேகப்பட போதிய காரணம் இப்போது ஒன்றுமில்லை. அப்படி ஏதாவது அசட்டுத்தனமான காரியம் நடைபெற்றால் அவர்கள் புறப்படுவதற்கு முன்பேகூட இந்தியாவில் ஒரு பெரும் புரட்சி பொதுஜனங்களிடை மட்டுமின்றி நிர்வாக யந்திரங்களிலும், பாதுகாப்புப் படைகளிலுங்கூடப் புயல்போல வீசியெழும் துர்ப்பாக்கிய நிலைமை ஏற்பட்டுவிடக் கூடுமென்பதையும் அது பிரிட்டிஷாருக்கு நல்லதல்ல என்பதையும் அவர்கள் உணர்ந்திருக்க வேண்டும். இதுவரை முடிந்தது போல இனியும் அத்தகைய புரட்சியை லேசில் சமாளிக்கமுடியாதென்பதையும் அவர்கள் உணர்ந்திருப்பார்கள் என்று நம்புவோம். மந்திரி சபை தூதுகோஷ்டியின் துணிவைப் பொறுத்தே எதிர்கால நிலைமை உருவாக வேண்டும்.

## காங்கிரஸின் பலம்

இந்தியாவெங்கும் பல மாகாணங்களில் நடைபெற்ற தேர்தல்களில் காங்கிரஸ்தான் தேசிய அபிலாஷைகளின் சின்னம் என்பது நிரூபணமாகியிருக்கிறது. கம்யூனிஸ்ட்கள் காங்கிரஸுக்கு எதிராக நின்று தங்கள் கோட்டைகளான தொழிலாளர் தொகுதிகளில் கூட ஆதரவைப் பெற முடியவில்லை. பம்பாயைத் தனது கோட்டையாகக் கூறி வந்தவரும், அந்தக் கோஷ்டியில் தன் அபேக்ஷகர்களைக் காங்கிரஸ் எதிர்த்து வெற்றி பெற்றுவிட்டால் தான் சரணாகதியடைந்து விடுவதாகவும் சவால் விடுத்த வருமான அம்பேத்கார் சவாலில் தோற்று ஓடிவிட்டார். சரணாகதி அவர் அடைந்ததாகத் தான் பொருள். ஒரு ஸ்தானம் கூட அவருடைய கக்ஷிக்குக் கிடைக்கவில்லை. முஸ்லீம் ஸ்தானங்களில் சிலவற்றில்தான் காங்கிரஸ் போட்டியிட்டது. வேறு சில இடங்களில் தேசிய முஸ்லீம்களை ஆதரித்தது ஆனால் லீக், முஸ்லீம் பிரதேசங்களில் நிறைய வெற்றியடைந்திருக்கிறது ஆயினும் வங்காளம் தவிர வேறெங்கும் லீக் மந்திரிசபை அமைக்கமுடியவில்லை. காரணம் லீக்பெற்ற வெற்றி மத உணர்ச்சியின் அடிப்படையில், மந்திரிசபை அமைக்க வேண்டியது சமூக சம்மேளன அரசியல் அடிப்படையில். எப்படியும் அரசியல் முறையில் காங்கிரஸ் ஒன்றுதான் நிர்வாகத்தை ஏற்கக்கூடிய ஸ்தாபனமாக விளங்குகிறது.

(3-ம் பக்கத் தொடர்ச்சி.)

லாம் என்று கிரிப்ஸ் துரை ஜாடையாகச் சொல்லியிருக்கும் விஷயம் வெறும் கேலிக் கூத்தாகத் தான் இருக்கிறது. சர்வதேச சபையின் நிலைமை நமக்குத் தெரியாததல்ல. ஆதிக்கப் போட்டிகளின் தாண்டவஸ்தலமாகிய அந்த சபையிடம் முறையிடுவதைவிட இந்திய பிரச்னையை வங்காளக் குடாக் கடலிலே போட்டு விடுவதே மேல் என்று தான் தோன்றுகிறது. இங்கே இல்லாத மூளை பலம் அங்கே என்ன இருக்கிறது என்று தான் தெரியவில்லை. தவிரவும் நேசநாட்டு சபை அங்கத்தினர்களில் எத்தனை பேருக்கு பூகோளப் படத்தில் இந்தியா இருக்கும் இடம் தெரியும் என்பதுகூட சந்தேகமே.

கடைசியாக, சர்வதேச அரசியல் நிலைக்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்திய அரசியலிடம் காட்டும் கவனத்துக்கும் சம்பந்தமில்லை என்று கிரிப்ஸ் துரை மழுப்பியிருப்பது ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயமல்ல ருஷியாவில் ஆதிக்கத்திற்கும் இதற்கும் சம்பந்தம் நிறைய இருக்கிறது.

### பாகிஸ்தான் பாட்டு.

தேர்தல் முடிவுகள் அநேகமாக முழுவதும் தெரிந்துவிட்டன. வங்காள மாகாணத்தில் லீக் வெற்றி பெற்றிருக்கிறது. சிந்து மாகாணத்தில் ஒரு கணம் புரட்சி வீரராகத் தோன்றிய பந்தே அலிகான் மறு கணம் பச்சோந்தியாக மாறிவிட்டார்—லீக் குடைக்குள் திரும்பவும் நுழைந்து கொண்டுவிட்டார்

ஜின்னாவின் பாகிஸ்தான் பாட்டு அதே சுருதியில்தான் இருந்துவருகிறது. கிரிப்ஸ்—ஜின்னா பேச்சுக்கள் எந்தப் போக்கில்சென்றன என்று ஊகம் செய்யமுடியவில்லை.

காங்கிரஸ் (ஒரு கட்சி என்கிற முறையில்) பாகிஸ்தான் பிரச்னையைப்பற்றி இப்போது என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிறது என்பது தெளிவாகவில்லை.

காங்கிரசின் சுய நிர்ணயத் தீர்மானத்துக்கும் ஜின்னாவின் பாகிஸ்தான் ஆட்சிக்கும் எள்ளளவும் சம்பந்தமே கிடையாது. இரண்டு தனி அரசியல் அமைப்பு சபைகள் ஏற்படுத்த வேண்டும் என்று ஜின்னா புலம்பி வருகிறார். இந்தியாவைத் துண்டாக்குவதே அவருடைய லட்சியமாக இருக்கிறது.

மாகாண எல்லைகளை மாற்றியமைப்பதால் ஜின்னாவின் பாகிஸ்தான் கோரிக்கையைப் பூர்த்தி செய்து விடுவதும் சாத்தியமில்லை. கிரிப்ஸ் துரை மனதில் வைத்திருக்கும் மாகாண சமஷ்டிக்கு ஜின்னா கட்டாயம் ஒப்புக்கொள்ளமாட்டார். அகில இந்தியாவுக்கும் ஒரே மத்திய அரசாங்கம் ஏற்படுத்துவதை ஜின்னா சம்மதிக்கப்போவதில்லை.

இந்த முட்டுக்கட்டை புதிதாகத் தோன்றியதல்ல. மந்திரிகள் கோஷ்டி லண்டனிலிருக்கையிலேயே ஜின்னா இதைத் தெளிவு படுத்திவிட்டார்.

பாகிஸ்தான் ஏற்படுத்தி, தற்காப்பு முதலிய அம்சங்களைக்கூட அதனிடம் பிரித்துக்கொடுப்பதைப் போன்ற முட்டாள் தனமான செய்கை இருக்கமுடியாது. குறிப்பிட்ட ஒரு நபரின் கனவுகாணும் ஆசையைப் பூர்த்திசெய்வதற்காக அவர் ஆட்டத்திற்கு சம்மதப்படுவது அர்த்தமற்ற விஷயம். இதைப் பற்றித்திருப்பித்திருப்பி பேச்சுகள் நடத்திக் குழப்பத்தில் காலம் கழிக்க மந்திரிகள் முற்பட்டால் அவர்களுடைய நல்லெண்ணம் மதிப்பற்றதாகத்தான்போய்விடும்.

### மகுடாதிபதிகள் ஓதும் மந்திரம்.

சமஸ்தானங்களின் பிரச்னை இன்னும் பயங்கரமாக இருக்கிறது. துணிச்சலான நடவடிக்கை எடுத்தாலல்லாது இதுதீரப்போவதில்லை

போபால் நவாப் தலைமை வகிக்க மகுடாதிபதிகளின் கோஷ்டி மந்திரிகளை சந்திக்கப்போகிறது.

மகுடாதிபதிகள் புதிய மத்திய அரசாங்கத்துடன், சில நிபந்தனைகளின்பேரில், ஒப்பந்தம் செய்து கொள்ளத் தயாராக இருக்கிறார்களாம். இந்த நிபந்தனைகள்தான் பயங்கரமாக இருக்கின்றன.

மகுடாதிபதிகளின் மகுடங்கள் என்றென்றும் வாழவேண்டுமென்பது முதல் நிபந்தனை. இரண்டாவது, புதிய மத்திய அரசாங்கம் சமஸ்தானங்களின் அரசியலமைப்பை மாற்றுவதோ, மாற்றாமலிருப்பதோ இந்த மகுடாதிபதிகள் பொறுப்பாம்.

இந்த நிபந்தனைகளுக்கு உட்படாவிடில் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு பிரத்தியேக தற்காப்பு உடன்படிக்கைகள் செய்துகொண்டு விடப்போவதாக மன்னர்கள் பயமுறுத்துகிறார்கள்!

இந்தப் பிடிப்புகளுக் கெல்லாம் மக்கள் உட்படமுடியாது. பிரித்தாளும் தந்திரத்தினால்தான் சமஸ்தானங்கள் உயிர் வாழ்ந்து வந்திருக்கின்றன என்பது வெட்ட வெளிச்சமாகவே மன்னர்களின் தனி மகுடங்களுக்கும், சமஸ்தானங்களின் பிரத்தியேக பித்தலாட்டங்களுக்கும் அவசியம் ஒன்றுங்கிடையாது

மகுடாதிபதிகளைப் பெயரளவில் உபகாரச் சம்பளம் கொடுத்து உட்கார்த்திவிட்டு, சமஸ்தானங்களையும் சமஷ்டியில் தற்காப்பு முதலிய முக்கிய பிரச்னைகளில் ஐக்கியப் படுத்தவேண்டியதும், சமஸ்தான அரசியலமைப்புகளை ஜனநாயக முறையில் மாற்றவேண்டியதும் மிக அவசியமான காரியங்களாகும்.

மாகாண, அல்லது, பிரதேசவாரியான சமஷ்டி ஏற்படுவதாயிருந்தால் முக்கியமாக ஒன்று செய்ய வேண்டும். இந்த சமஷ்டியின் ஒவ்வொரு அங்கமும் ஒரே மாதிரியான ஜனநாயக அமைப்புக்கு உட்படுத்தப்படவேண்டும்.

ஃ ஃ ஃ

மந்திரிகளின் போக்கு எப்படி இருக்கும் என்று காத்திருந்து பார்க்கலாம்.

★



# சிவாஜி தர்பார்

## பாகிஸ்தான் பயங்கர சொரூபம்

## ஜின்னா இந்தியர் அல்லவாம்

## இந்தியாவைத் துண்டாட என்ன உரிமையிருக்கிறது?

["பாலாஜி"]

லீக் தலைவர் மகம்மதலி ஜின்னாவின் மனக் கெடிகாரத்தில் காலம் ரொம்பப் பின்னேக்கிப் போய்க்கொண்டிருக்கிறது என்று தெரிகிறது. பல நூற்றாண்டுகளுக்கு முன்பு மதங்களின் பெயரால் ராஜ்யஸ்தாபனங்களும் மதவாரி அரசியல்களும் நடைபெற்ற காலம் மாறி, இப்போது பிரதேசவாரி அரசியல்கள் ஏற்பட்டு பற்பல மதத்தினரும் மதமே இல்லாதவர்களும் தங்கள் உரிமைகளுக்கான பாதுகாப்புக்களைப் பெற்றுக்கூடி வாழும் முறை உலகெங்கும் அமுலிலிருக்கிறது. ஆனால் ஜின்னாவோ தன்னுடைய மதத்திற்காக ஒரு தனி ராஜ்யமும் அதற்கான அரசியல் அமைப்புமே வேண்டுமென்கிறார். அதனால்தான் பிரதேசவாரி அரசியல் தத்துவப்படி தன்னை ஒரு இந்தியன் என்று ஒப்புக்கொள்ள அவர் மறுப்பதுடன் தன் மதத்தின் மகோன்னத நிலைக்கான ஒரு பிரதேசத்தை இந்தியாவிலிருந்து வெட்டி எடுத்துக் கொள்ள நினைக்கிறார் போலும்!

பாகிஸ்தானைப்பற்றி இதுவரை ஜின்னா கூறியுள்ள விளக்கங்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தா சம்பந்தமில்லாமல் புதுப்புது விபரீதக் கருத்துக்களை வெளியிட்டு வந்து இப்போது மதத்தின் அடிப்படையில் ஒரு ராஜ்யம் வேண்டுமென்று சொல்லக்கூடிய அளவுக்கு வந்து விட்டது.

ஆரம்பத்தில் குறிப்பிட்ட ஒரு சமூகத்தினர் மெஜாரிடியாக இருக்கும் இடங்களில் பிறர் உபத்திரவமோ தலையீடோ இல்லாமல் சுதந்திரமாக வாழும் உரிமைவேண்டும் என்ற கோரிக்கைபோல பாகிஸ்தானைப்பற்றி வியாக்யானம் செய்துவந்தார். அப்படியானால் ஒரு பகுதியில் மெஜாரிடியாக உள்ளவர்கள், ஹிந்துவோ, சீக்கியரோ எந்த சமூகத்தினரானாலும் அவர்களுக்கும் அந்தந்த பிரதேசத்தில் சுயாட்சியுடன் வாழ உரிமையுண்டு என்று ஜின்னா ஒப்புக்கொள்ளுகிறார் என்று பலரும் கருத இடம் கொடுத்தது. அப்படி அவர் விரும்பும் பாகிஸ்தானுக்கு உட்பட்ட பிரதேசங்களில் (அதாவது தற்போது அமுலிலிருக்கும் மாகாணப் பிரிவுகளில்) முஸ்லீம்கள் மெஜாரிடியில்லாத இடங்களை நீக்கித்தான் கணக்கிடுகிறார் என்றும் நினைத்து வந்தோம்.

ஆனால் பாகிஸ்தான அல்லது முஸ்லீம் மெஜாரிடி மாகாணங்கள் என்பன ஆறு என்றும் அவற்றில் பாஞ்சாலம், வடமேற்கு எல்லைப்புறம், சிந்து பலுஜிஸ்தானம் இவை பாகிஸ்தானின் வடமேற்கு பகுதியாகவும், அஸ்ஸாம், வங்காளம் இரண்டும் பாகிஸ்தானில் வடகிழக்குப் பகுதியாகவும் இருக்குமென்று இப்போது ஜின்னா விளக்க ஆரம்பித்திருக்கிறார்.

பாஞ்சாலத்தில் சீக்கியர்கள் பெரும்பான்மை யுள்ள பகுதி இருப்பதையும், அஸ்ஸாம் பூராவும் ஹிந்து மெஜாரிடியுள்ள பிரதேசம் என்பதையும் பற்றி அவருக்கு அக்கறையில்லை. யார் மெஜாரிடியாக இருந்தாலும் அந்தப் பிரதேசங்கள் பாகிஸ்தானில் இருக்கத்தான் வேண்டுமாம். அப்படிக்கோருவதற்கு முக்கிய காரணம் பாகிஸ்தான் ராஜ்யத்தின் பொருளாதார வர்த்தக நலன் அபிவிருத்திக்கு இந்தப் பிரதேசங்கள் முக்கியமாகத் தேவைப்படுகிறதாம்.

சுருக்கமாகச் சொன்னால், முஸ்லீம்களுக்குத் தனியாக ஒரு ராஜ்ஜியம் வேண்டும்.

இதை வற்புறுத்துவதற்காக அவர் முஸ்லீம்களும் ஹிந்துக்களும் நேர்முரணான இருமதத்தினர் என்றும் அவர்கள் ஒரு பொது நாட்டினராக வாழ முடியாதென்றும், சமூக, கலாசார அடிப்படைவேற்றுமைகள் உடைய எதிரிகள் என்றும் மக்களைப் பிரித்து வர்ணிக்கிறார். பல நூற்றாண்டுகளாக சகோதரர்களாக வாழும் இரு பெரும் சமூகத்தினர் இனி ஒருவரையொருவர் எதிர்த்து வெற்றி கொள்ளவும் அடிமைப்படுத்தவும் தனித்தனி ராஜ்யங்களை சிருஷ்டிப்பதே ஜின்னாவின் விருப்பம் என்று நன்கு தெரிகிறது.

பாகிஸ்தானிலும் பாகிஸ்தான் அல்லாத பிரதேசத்திலுமுள்ள மைனாரிடிகள் விரும்பினால் தங்கள் தங்கள் தனி ராஜ்யங்களுக்குக் குடியேறிவிடுவதில் ஆக்ஷேபணை கிடையாதாம். அதாவது சென்னை மாகாணத்தில் உள்ள முஸ்லீம்கள் பாகிஸ்தான் ராஜ்யத்திற்குச் சென்றுவிடுவதாயிருந்தால் அவர்களை ஜின்னா வரவேற்கிறார். ஜின்னாவின் அந்தக் கற்பனை ராஜ்யத்தில் வேண்டிய இடம் தாராளமாக இருக்கும். அந்த ராஜ்யத்தில் ஹிந்துக்களும் இதர வகுப்பாரும் சுதந்திரமுள்ள பிரஜைகளாக மதிக்கப்படுவார்களாம்.

இந்தியரேயல்லாத, இந்திய கலாசாரங்களுடன் முரணும் விரோதமுமுள்ள ஜின்னாவின் ராஜ்யத்தில் இதர வகுப்பு மைனாரிடிகளுக்கு எத்தகைய சுதந்திரம் இருக்குமென்பதைப்பற்றிப் புரிந்துகொள்ள வேண்டுமானால், தென்னாப்பிரிக்காவில் சுதந்திரமுள்ள பிரஜைகளென்று இந்தியரை வெள்ளையர் வர்ணிக்கிறார்களே அந்த மாதிரி என்று வைத்துக்கொள்ளலாம்.

ஜின்னாவின் பாகிஸ்தான் விளக்கம்பற்றி தென்னாட்டு முஸ்லிம்கள் நன்கு சிந்தித்து முடிவுக்கு வர இப்போது வழியேற்பட்டிருக்கிறது. பரம்பரை பரம்பரையாக இந்தியர்களாக வாழும் அவர்கள் இனியும் தங்களை இந்தியர்களென்று கருதி வாழப்போகிறார்களா, பாகிஸ்தானுக்குப்போய் விடுவதா என்பது யோசிக்கத்தக்கதாகும். இந்தியாவின் வேறு ஒரு சமூக குடும்பத்திலிருந்து இஸ்லாம் மதத்தைத் தழுவிய காரணத்திற்கு மதத்தின் பெயரால் இன்று திடீரெனத் தாங்கள் இந்தியர்களல்லவென்று கற்பனை செய்துகொள்ள வேண்டுமாம். கூடப்பிறந்த சகோதரர்களாக இன்று வரை ஒத்து வாழ்ந்துவந்த அருமை நண்பர்கள் முஸ்லீமல்லாதவர்களானால் அவர்களை விரோதிகளாக நினைத்துக்கொள்ளும்படி ஜின்னா உபதேசிக்கிறார்போலும்!

ஒருநாளும் நடக்கமுடியாத விஷயங்களில் முஸ்லிம் பொதுமக்களின் உணர்ச்சியைத் தவறான வழியில் திருப்ப ஜின்னா முயலுகிறார். பாகிஸ்தான் கிடைக்காவிட்டால் பெரும் பூகம்பம் ஏற்படும் என்று சொல்லும் ஜின்னா தன்னுடைய இந்தக் கொள்கையால் பெரும் பிரளயமே ஏற்படக்கூடுமென்பதை உணரவில்லை.

மதத்தின் அடிப்படையில் அரசியல் அமைந்தாலும், வேறு மதத்தினர் பாகிஸ்தான் பிரதேசத்தில் சிக்கிக் கொள்பவர்கள் மதம்

(அடுத்த பக்கம் பார்க்க)

கடல் கடந்த இந்தியர் நிலைமை 1

# தென்னுப்பிரிக்காவில் நிறத் திமிர்

## இந்தியர்களுக்கு ஏற்பட்டுள்ள அவமரியாதை ஆசியா பூராவுக்குமே

தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்கள் வாசம் செய்து வருவது இன்றைய, நேற்றைய விஷயமல்ல. அவர்கள் பல காலமாகத் தென்னுப்பிரிக்காவில் குடியேறி, அதன் பொதுவள முன்னேற்றத்துக்குக் காரணமாயிருந்திருக்கிறூர்கள்.

தென்னுப்பிரிக்க இந்தியர்கள் பட்ட கஷ்டங்களுக்கு எல்லேயே கிடையாது. பர்மாவில் போலவே அங்கேயும் இந்தியர்கள் சுதேசிகளின் வெறுப்புகளுக்குப் பாத்திரமாகி இருக்கிறூர்கள். போதாக்குறைக்கு அதிகாரத் திமிர்பிடித்த வெள்ளேயர்களின் நிறத்துவேஷமும் அவர்களே வாட்டி வதக்கியிருக்கிறது.

ஆங்கில சாம்ராஜ்யத்தின் பற்பல பாகங்களிலும் இந்தியர்கள் குடியேறி வெகு காலமாக வாசம்செய்து வந்திருக்கிறூர்கள். வியாபார வர்த்தகத் துறைகளில் ஈடுபட்டவர்களும், தாய்நாட்டில் வேலேயின்றித் தவித்த கூலியாட்களுமே தாய்நாட்டிலிருந்து வெளியேறிப் புதிய இடங்களில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டார்கள்,

புதிய இடங்களில் குடி புகுந்தவர்கள் காலப்போக்கில் அந்த அந்த இடங்களில் இயற்கையான பாத்யதைகளே அடைய முயற்சி செய்தார்கள். அவர்கள் இந்தியர்கள், அல்லது வெளிநாட்டவர்கள் என்று கருதப்படும் அளவுக்கு ஒரு குந்தகமும் விளேக்கவில்லே, இதற்கு மாருக தாங்கள் குடிபுகுந்த இடங்களின் முன்னேற்றத்திற்காகவும் பொது நலத்துக்காகவும் அவர்கள் அரும்பாடு பட்டார்கள்.

இந்திய மண்ணின்மேல் படையெடுத்து வெற்றிபெற்று, அதன் காரணமாகத் தங்களுக்கு இங்கே ஒரு இடம் சம்பாதித்துக்கொண்டு, காலப்போக்கில் கலாசாரங்களிலும், ஜனத் தொகையிலும் விருத்தியடைந்து, இந்தியாவிலேயே இயற்கையாக ஒன்றிப் போய்விட்ட முகம்மதியர்களேப்பார்த்து நாம் சிறிதளவும் கடுத்துக்கொள்ளவில்லே—கடுத்துக் கொள்ளவும் மாட்டோம்.

ஆனுல் இந்தியர்கள் வெளி நாடுகளில் சமாதான முறையில் குடியேறித் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டு, சுகமாக வாழ்வதற்கு இடைஞ்சல்கள் புதிது புதிதாக உற்பத்தி செய்யப்படுவதைத்தான் நம்மால்சகிக்கமுடியவில்லே.

உழைக்கச் சென்ற இந்தியர்களுக்கு வாழ உரிமையில்லே என்று வெள்ளேக்காரர்கள் பகிரங்கமாகப் பிரசாரம் செய்தார்கள். வசதியாக வசிக்கமுடியாமல், விரும்பியபடி வியாபாரம் செய்யமுடியாமல் இந்தியர்கள் அல்லலுற்ருர்கள்.

இந்தியர்களின் கஷ்டங்களேக் கண்டு மகாத்மா காந்தியடிகள் ரத்தக் கண்ணீர் வடித்தார். தன்னுடைய சாத்விக ஆயுதமான சத்தியாக்கிரகத்தைப் பிரயோகம் செய்தார். இரண்டு, மூன்று முறை தென்னுப்பிரிக்கா சென்று அநீதிகளேக் ஓரளவு தடுத்தார்.

ஆனுல் துவேஷ புத்தி படைத்த தென்னுப்பிரிக்க சர்க்கார் தன் மனத்தை மாற்றிக் கொள்ளவில்லே. இந்தியர்களுக்குத் தொடர்ந்து உபத்திரவம் கொடுத்துக் கொண்டே வருகிறது.

சில வருஷங்களுக்கு முன்னுல் தென்னுபிரிக்க சர்க்கார் முடக்கல் சட்டம் என்றதொரு சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தது. இந்தச் சட்டத்தின்படி வெள்ளேயருக்குச் சொந்தமான நிலங்களே இந்தியர்கள் வாங்குவதற்குத் தடை விதிக்கப்பட்டது.

இதைவிட மோசமான மசோதா ஒன்று இப்போது சட்டமாக்கப்படவிருக்கிறது. இதன் கடுமை சர்வதேச கவனத்தைக் கவர்ந்திருக்கிறது.

இந்த மசோதவின்படி சில குறிப்பிட்ட பிரதேசங்களில் மாத்திரம் தான் இந்தியர்கள் நிலம் வாங்கவும், விற்கவும், குடியிருக்கவும் முடியும். மிகுதியுள்ள இடங்களில் குடியிருக்கவும், நில பாத்தியத்தை வகிக்கவும் இந்தியர்களுக்கு உரிமை கிடையாது.

தவிரவும் இந்தியர் வெள்ளேக்காரர் மாத்திரமல்லாமல் வேறு எந்த ஜாதியாரிடமிருந்தும் நிலபுலன் வாங்கக் கூடாது என்று இம்மசோதா கூறுகிறது.

இது இந்தியர்களுக்கு மாத்திரமல்ல ஆசியர்களுக்கே பொதுவான நிபந்தனே. இது ஆசியர்களே, குறிப்பாக, இந்தியர்களே எவ்வளவு தூரம் அவமானப்படுத்துகிறது என்று சொல்லத் தேவையில்லே.

இந்த மசோதா கொண்டு வரப்பட்டவுடன் இந்திய சர்க்கார் காமன்வெல்த் உறவு அங்கத்தினர் டாக்டர் கரேயைக் கண்டு பேசி ஒரு முடிவுக்கு வர முற்பட்டார்கள்.

ஆனுல் தென்னுப்ரிக்க சர்க்கார் தன்னுடைய தீவிரக் குருட்டுத்தனத்தை மாற்றிக்கொள்ள விரும்பவில்லே. இதன் பயனுக இந்தியாவுக்கும் தென்னுப்பிரிக்காவுக்குமிடையே இருந்த வர்த்தக ஒப்பந்தங்களே இந்திய சர்க்கார் ரத்து செய்து விட்டது.

ஸ்மட்ஸ் துரையின் தலேமையில் வேலே செய்யும் தென்னுப்ரிக்க அரசாங்கம் அசைந்து கொடுக்கவில்லே. இதே மசோதா இரண்டாம் முறையாக தென்னுப்ரிக்க சட்ட சபையில் வந்தது.

விவாத சமயத்தில் ஜெனரல் ஸ்மட்ஸ் மசோதாவைப் பலமாக ஆதரித்துப் பேசினுர். அவரது பேச்சில் துவேஷமும், விஷமும் கலந்திருக்கிறது. இந்த மசோதாவினுல் இந்தியர்கள் லாபமடைவார்களென்றும், வகுப்புத் துவேஷம் இந்தியர்களுக்குப் புதிதில்லே என்றும் ஸ்மட்ஸ் பசப்பியிருக்கிறூர்.

இதையெல்லாம் கண்டித்து மகாகனம் சாஸ்திரியார் ஒரு அறிக்கை விடுத்திருக்கிறூர்.

"தென்னுப்பிரிக்க சர்க்காரின் புதிய நடவடிக்கை நாகரிக ஆட்சிக்கு நேர் விரோதம் என்று சில வெள்ளேயர் கருதினுலும் பெரும்பாலான வெள்ளேயர் இதை ஆதரிப்பார்களென்பதில் சந்தேகமே யில்லே. அரசியல் பலத்தை இவ்விதம் வெட்கமின்றி அநியாயமாக துஷ்பிரயோகம் செய்யப்படுவதை நாம் வேறெங்கும் கண்டதில்லே. சென்ற சில வருஷங்களாக நடைபெற்ற சோதனேகளுக்குப் பின்னர் மீண்டும் தலேயெடுத்த நவயுகம் இந்த ராட்சஸப்பிறவியைச் சகித்துக் கொண்டிருப்பதென்பது அக்கிரமம்நிறைந்தசோகப்படலமாகும்."

இந்திய சர்க்கார்இவ்விஷயத்தில், இந்தியர் நலனேக்கோறி, கடுமையான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும்.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

மாறும்படி நிர்ப்பந்தப்படுத்தப்படமாட்டார்கள் என்றும் வாக்குறுதி அளிக்கிறூர் அதாவது மதம்மாறித்தான் ஆகவேண்டுமென்று நிர்ப்பந்திக்கும் அதிகாரமிருந்தாலும் அதை உபயோகிப்பதில்லே என்று சத்யம் செய்து கொடுக்கத் தயாராயிருக்கிறூர் என்று வைத்துக் கொள்ளலாம்.

1. முஸ்லிம்கள் இந்தியர் அல்ல. ஒரு தனி அரசு அவர்களுக்கு வேண்டும்.
2. அதன் அஸ்திவாரத்திற்குத் தேவையான பிரதேசங்கள் முஸ்லீம் அல்லாதவர்கள் மெஜாரிடியாயிருக்கும் மாகாணங்களிலிருந்தாவது வெட்டி பாகிஸ்தானில் சேர்க்கவேண்டும்.
3. பாகிஸ்தான் மாகாணங்களிலும் முஸ்லீம்அல்லாதார் மெஜாரிடியாக இருக்கக்கூடிய எந்தப் பகுதியும் பாகிஸ்தானிலிருந்து விலக்கப்படக்கூடாது.
4. அப்படிப் பாக்கிஸ்தானில் கட்டாயப் பிரஜையாகிவிட்ட முஸ்லீம் அல்லாதாருக்கு மதஉரிமை மறுக்கப்படமாட்டாது.
5. பாகிஸ்தான்அல்லாத மாகாணத்திலுள்ளமுஸ்லீம்கள் அவர்கள் விரும்பினுல் பாகிஸ்தான் ராஜ்ஜியத்திற்கே வந்து விடலாம்.
6. இந்த ஏற்பாட்டை ஒப்புக் கொள்ளாவிட்டால் பிரிட்டிஷாருடனே யாருடனுமோ எந்த வித சமரசப் பேச்சும்இல்லே.
7. இந்தப்பிரச்னே கொள்கைஅளவில் முதலில் தீர்ந்துவிட்டால் பாகிஸ்தான் அமைப்புக்கு ஒரு தனி அரசியல் நிர்ணய சபை அமைக்கவேண்டும் அதன் வேலேபாகிஸ்தானே உருவாக்குவதும் தலேநகரம் போன்றவற்றை நிர்ணயிப்பதுமான நிர்வாகத் திட்டம் அமைப்பதுமாகும்.

பிரிட்டிஷ் மந்திரிகள் ஜின்னுவின் பாகிஸ்தான் சொரூபத்தை முற்றிலும் உணர்ந்துகொள்ளவேண்டிய கடைசி தருணம் இது.

---



---

### திருச்சி சப் கோர்ட்டு
### S. C. 12/46

திருச்சி ஸ்ரீராமுலு செட்டியார் ஸ்டோர் S. A. சுப்ரமணிய அய்யர் குமாரர் A. S. விஸ்வநாதய்யர் —வாதி

திருச்சி சின்னக்கடைத்தெரு காடிகாஞ சந்து கோவர்த்தன விலாஸ் ஸ்டோர் சுப்ரமனிய அய்யர் குமாரர் போஸ்ட் ஆபீசு குமாஸ்தா S. ராமய்யா —பிரதிவாதி

பிரதிவாதி S. A. சுப்ரமணிய அய்யருக்கு எழுதிக்கொடுத்த புரோநோட்டுப்படி, வாதி மேடோவர்படி, தொகை ரூ. 600 கிடைக்கவேணுமாய் தாவா செய்து 16—4—46ல் ஈரங்கி போடப்பட்டிருக்கிறபடியால் அன்றையதினம் பிரதிவாதி ஷை கோர்ட்டில் ஆஜராகி கக்ஷிகளேச் சொல்லிக்கொள்ளாவிடில் எக்ஸ்பார்ட்டி தீர்ப்பு செய்யப்படும்.

E. S. SUNDARAM IYER,
1—4—46. Pleader.

---

### திருச்சி சப் கோர்ட்டு
### O. S. No. 144/45 I. A. 940/46

திருச்சி வரகனேரி சுப்ரமணிய ஜனுபகார நிதி லிமிடெட் by its present செக்ரெடரி ஸ்ரீ ரெங்கசாமி பிள்ளே —மனுதார் வாதி

தமிழ் நாடு Corporation Ltd., Trichinopoly Represented by its Managing Director P. M. A. R. M. ராமனுதன் செட்டியார் —எதிர் மனுதார் முதல் பிரதிவாதி

ஷை நெம்பரில் 1ம் பிரதிவாதி கார்பரேஷனுக்கு சேரவேண்டியதாக

---

### நோட்டீஸ்

### குளித்தலே டி. மூ கோர்ட்டு
### O. S. No. 484/45.

பழனியாண்டி செட்டி —வாதி

பாக்கியத்தம்மாள் வகையரு } பிரதி வாதிகள்

வாதி தகப்பன் வீரபத்ர செட்டிக்கு முதல் பிரதிவாதி தகப்பனுல எழுதிக்கொடுக்கப்பட்ட ஈட்டுப் பத்ரப்படி ரூ. 300க்கு தாவா செய்யப்பட்டு 10—4—46ல் வாய்தா போடப்பட்டிருக்கிறது.

எஸ். அண்ணுத்துரை அய்யங்கார்,
வாதி வக்கீல்.

---

திருச்சி டி. மு. கோர்ட்டில் O. S. No. 469/1944ல். டிபாசிட்டிலிருந்து வந்த தொகையை இந்த நெம்பருக்கு Send for செய்யமனுக்கொடுத்து அதன் பேரில் send for & நோட்டீசுக்கும்உத்திரவாகி 10—4—46வ ஈரங்கி போடப்பட்டிருப்பதை அறியவும்.

எம். ராமச்சந்திர அய்யர்,
அட்வோகேட் B.A. M.L., திருச்சி.




படவிமர்சனம்.

## ஸ்வர்க்க ஸீமா



வாஹினி பிக்சர்ஸாரின் இப் படத்தை பி. என். ரெட்டி டைரக்ட் செய்திருக்கிறார். நாகையா, ஜெயம்மா, பானுமதி, லிங்கமூர்த்தி முதலியோர் நடித்திருக்கிறார்கள். படம நியூடோனில் தயாரிக்கப் பட்டது.

"நாட்டிய பாரதியின் ஆசிரியர் மூர்த்தி தன் அழகிய மனைவி கல்யாணியுடனும், இரு குழந்தைகளுடனும் கிராமத்திற்கு வந்தபோது கங்கண்ணாவின் தெருக்கூத்தைப் பார்க்க நேரிடுகிறது. அதில் மோகினி வேஷம் தரித்து நாட்டியமாடிய சுப்புலுவும் கங்கண்ணாவும் மறுநாள் காலை மாமூல் இனும் வாங்க மூர்த்தியின் வீட்டிற்கு வருகிறார்கள். கல்யாணிக்கு சுப்புலுவை சிறுவயதுமுதலே தெரியுமாதலால் அவள் முன்னேற்றத்திற்கு தன் கணவனை ஏதாவது உதவி செய்யும்படி வேண்ட மூர்த்தியும் பெஜவாடா நாட்டிய மண்டலிக்கு ஒரு சிபார்சுக் கடிதம் எழுதிக் கொடுக்கிறான்.

சுப்புலு ஸுஜாதாதேவியாக பிரபல நட்சத்திரமாகிவிடுகிறாள். நாட்டிய மண்டலியின் மானேஜர் ஸ்ரீனிவாசனுடன் தனிக்கம்பெனி நடத்துகிறாள். ஊர் ஊராகச்செல்லும் இக்கம்பெனியின் மேனகா நாடகத்தை மூர்த்தி பார்க்க நேரிடுகிறது. ஸுஜாதா தன்னால் சிபார்சு செய்யப்பட்ட சுப்புலுதான் என்பதை அறிகிறான். ஸுஜாதா மறுநாள் மூர்த்தி வீட்டுக்குவந்து கல்யாணிக்கும் மூர்த்திக்கும் மாலை போட்டு தன் நன்றியைத் தெரிவிக்கிறாள். மூர்த்தி தன் மனைவியின் வற்புறுத்தலுக்கிணங்கி ஸுஜாதாவிற்கு ஒரு நாடகம் எழுதித்தர இசைகிறான்.

நாளடைவில் மூர்த்தியைத்தன் வலையில் சிக்கவைக்கிறாள் ஸுஜாதா தன் லட்சியங்களையும் மனைவி குழந்தைகளையும் தவிக்க விட்டு மூர்த்தி ஸுஜாதாவுடன் கிளம்பிவிடுகிறான்.

கல்யாணியைக் கஷ்டங்கள் தொடருகிறது. ஏழ்மையால் தவிக்கிறாள். தையல் வேலைசெய்து குழந்தைகளைக் காப்பாற்றி வருகிறாள். ஸுஜாதாவுடன் ஊர் சுற்றும் மூர்த்தியின் வாழ்வில் நரேன் என்ற நாகரீக வாலிபன் தோன்றுகிறான். அவன் பேச்சில் ஸுஜாதா மயங்குகிறாள். இந்த சமயத்தில் மூர்த்தி தலையில் திரைக்கயிறு அறுந்து கம்பம் தலையில் விழுந்து ஆபத்துக்குள்ளாகிறான். சிகிச்சையில் இருக்கும்போது ஸுஜாதா நரேனுடன் ஆனந்த வாழ்க்கை நடத்த ஆரம்பித்து விடுகிறாள்.

திரும்பி வந்த மூர்த்தியைப் புறக்கணிக்கிறாள். மூர்த்தி தன் மனைவிக்குத் தான்செய்த கொடுமையை உணர்கிறான். அவளைத் தேடி அலைகிறான். அதற்காக பிடில் விற்கும் பிச்சைக் காரனாகவும் மாறுகிறான். கடைசியில் மனைவி குழந்தைகளைக் கண்டுபிடிக்கிறான் மறுபடி இன்ப வாழ்க்கை தொடங்குகிறது.

இதுதான் கதை—பழைய கதை. 100க்கு 50 தெலுங்குப்படங்களில் இதே கதைதான். தாம்பத்ய வாழ்வு—இடையில் மாயவலையில் சிக்கல்—மறுபடி மனைவியோடு சேர்தல்—வாஹினியாரின் கிருஹலக்ஷ்மியிலும் இதே கதை தான். அதிலும் நாகையாதான். தமிழ்ப் படங்களிலும் இந்தக்கதைதானே? இந்த வகையில் பரமசிவன் அருள் புரிய வந்து வந்து போவதும் பதிவிரதைக் கின்னல் வந்து பழையபடி தீருவதையுமே கருப் பொருளாகக் கொண்ட தமிழ்ப்படங்கள், மனைவிக்கும் கணவனுக்கும் மனஸ்தாபம் வரும் தீரும் என்ற கருத்தையே கொண்டுமிளிரும் தெலுங்குப்படங்களுடன் சரிகிகர் சமானமாக இருப்பதை எண்ணி மகிழலாம் அல்லவா? தமிழ்ப் படங்களில் பெரும்பாலும் ஒரேமாதிரியான புராணங்கள் எத்தனை உண்டோ அத்தனையும் திரும்பத் திரும்ப வருகின்றன. தெலுங்குப் படங்களில் நடுத்தர வாழ்க்கை—அதிலும் நாகரீக வாழ்வின் ஒரேமாதிரியான சிக்கல் திரும்பத் திரும்பப் பல கதை உருவங்களில் வருகின்றன. என்றாலும் தெலுங்குப் படங்களில் விரஸம் தட்டாமல் பார்த்துக்கொள்ளுகிறார்கள் கருத்தொன்றயிருந்தாலும் கதை வேறுதான் என்று காட்டும் வண்ணம் இதற்கு மெருகு கொடுக்கப்பட்டிருக்கிறது.

'மேலே என்ன?' என்ற பிரச்னையோடு கதை செல்லவில்லை ஆரம்பித்திலேயே 'இதுதான் நடக்கப்போகிறது' என்று தெரிந்துபோவதால் விறுவிறுப்பு இல்லையே ஒழிய மற்றபடி வாஹினியாரின் சிறப்புகள் எல்லாம் படத்தில் இருக்கிறது.

நல்ல டைரக்ஷன். ஒளி, ஒலிப் பதிவுகள் திருப்திகரமாய் இருக்கின்றன. சில இடங்களில் ஆங்கிலப் படங்களைப் போல் காமராவைக் கையாண்டிருப்பது மெச்சத்தகுந்தது. படம் ஆரம்பிக்கும் போதும் இடை இடையேயும் கதைச் சுருக்கத்தை—நடக்கப் போவதை—தமிழில் சொல்வது, தெலுங்கு தெரியாதவர்களுக்கும் இந்தக் கதை புதிதாக உள்ளவர்களுக்கும் சௌகரியமாக இருக்கிறது. இது ஒரு புது முயற்சி என்று நினைக்கிறேன்.

சில இடங்களில் நல்ல கற்பனைகள் கையாளப்பட்டிருக்கிறது. ஸுஜாதா மூர்த்தியை மயக்கும் கட்டத்தில் அவளுக்குப் பின்னால் சிலந்தியின் வலைபோன்ற ஸெட்டிங்கை அமைத்திருப்பது ரொம்பப் பொருத்தமாய் இருக்கிறது. "ஸிம்பாலிக்" என்று சொல்லப்படும் இவ்வித உருவகக் காட்சிகள் பெரும்பாலும் தமிழ்ப்படங்களில் கையாளப்படுவதேயில்லை.

நடிப்பில் முதல் ஸ்தானத்தை ஜெயம்மா பெற்று விடுகிறார். தமிழ் பர்த்ருஹரியில் நடித்த ஜெயம்மாவா இவர் என்ற பிரமிப்பு ஏற்படுகிறது நமக்கு. பாத்திரத்திற்கு ஏற்ற உணர்ச்சியுள்ள நடிப்பு. உத்தமமனைவியின் உள்ளப்பண்புகளைத் தத்ரூபமாகக் காட்டி விடுகிறார். இன்பவாழ்க்கை நடத்தும்போதும் சரி கஷ்டமனுபவிக்கும்போதும்சரி அவர் தன் நடிப்பில் நம்மைப் பரவசப்படுத்தி விடுகிறார் அவர் பாடும் பாட்டுக்களும் நன்றாகவே இருக்கின்றன. சுப்புலு—ஸுஜாதாவாக நடிக்கும் பானுமதி நன்றாகவே நடித்திருக்கிறார். ஆனால் சில இடங்களில் அவர் நடிப்பு அளவுக்கு மீறி இருக்கிறது.

நாகையாவின் நடிப்பு வழக்கம் போலவே இருக்கிறது அவர் சோகக்கட்டத்தில் நீட்டிமுழக்கிக் கொண்டு பாடி இருக்க வேண்டாம்.

கங்கண்ணா, நரேன் முதலியோர்களும் தங்கள் பெயரைக்கெடுத்துக்கொள்ளவில்லை.

சில இடங்களில் ஒலிப்பதிவு சுமாராக இருக்கிறது. மொத்தத்தில் இது புது மெருகு ஏற்பட்ட கதையாக இருந்தாலும் அவசியம் பார்க்கவேண்டிய படம். வாஹினியின் படமென்றாலே தனி மதிப்புதானே.

—மூர்த்தி.



● ஏப்ரல் மாதம் பிறந்தது. மளமள வென்று புதுப்படங்களெல்லாம் வெளிவருகின்றன. சித்ரா கிளம்பிவிட்டாள். மாயாலோகம் வந்தாயிற்று. ஸ்வர்க்கசீமாவும் கிளம்பிவிட்டது தமிழ் வருடப் பிறப்புக்கு வால்மீகியார் கிளம்பப் போகிறார். நாரத நாரதி வேறு இருக்கிறது வருடப்பிறப்பு ரிலீஸுக்கு. வால்மீகியில் டி. ஆர். ராஜகுமாரிக்கு அபார மேக்கப்பாம். என். ஸி. வஸந்தகோகிலத்திற்குப் பாதிபடத்திற்குமேல்தான் வேலையாம். நல்ல வேஷப்பொருத்தத்தோடு கர்ணாமிருதமாகக் கானம் செய்கிறாராம். சுந்தர்ராவ் நட்கர்னி டைரக்ட் செய்திருக்கிறார்.

● ஜெமினியிலே ருக்மாங்கதா மளமளவென்று வளர்ந்து வருகிறதாம். படத்தில் ஒரே நக்ஷத்திரமயம் தானாம் ஜி. என். பி: பி. ஏ. பெரியநாயகி, மங்களம், கோவிந்தன், ஜோக்கர் ராமுடு, ஸி. வி. வி. பந்துலு, பி. எ. ராஜாமணி, நாராயணராவ், ராஜகாந்தம்.........எப்படி? ஒரே அமர்க்களந்தான்.

● பிரகதியின் ஏகம்பவாணனில் போனவாரம் சாரங்கபாணி, ராஜகாந்தம் சம்பந்தப்பட்ட காக்ஷிகள் சுடப்பட்டதாம். இருவரும் பிரமாதமாக நடித்திருக்கிறார்களாம். டைரக்டர் பி. என். ராவும், டி. வி. கிருஷ்ணஸ்வாமியும் சரவணபவா பிக்சர்ஸாருக்கு இந்த முதல் படத்திலேயே பிரமாத வெற்றி ஏற்படும் வகையில் படத்தை வளர்த்து வருகிறார்களாம்.

● சேலம் கணபதி பிக்சர்ஸாரின் சுலோசனாவில் டைரக்டர் சுந்தரம் வசந்தாவுடன் தானே கதாநாயகனைத் தோன்றினால் என்ன என்று யோசித்து வருவதாகத் தெரிகிறது.

● ஜுபிடரின் வித்யாபதியில் டி. ஆர். ராமச்சந்திரன் காளிரத்னம், மங்களம், தவமணி தேவி, ராஜகாந்தம் முதலியோர் நடிக்கப் போகிறார்களாம். ஏ. டி. கிருஷ்ணஸ்வாமி டைரக்ட் செய்கிறாராம்.

## நகர காட்சிகள்

PLAZA TALKIES
7, 8. "The GREAT MOMENT"
9, 10. "JOHNNY ANGEL"
11, 12, 13. "HOLLYWOOD GANTEEN"

முருகன் — அலிபாபாவும் நாற்பது திருடர்களும் (இங்கிலீஷ் படம்.)
ராஜா — ஸ்வர்க்க சீமா (தெலுங்கு)
வெலிங்டன் — அர்த்தநாரி
ராக்ஸி — என் மகன்
கெயிட்டி — ஜங்கிள் புக்
பிரபாத் — பீஸ்வி சதி
ராமகிருஷ்ணா — ஹாதிம்தாய்-கி-பேட்டா
ஸ்ரீரங்கம் ஸ்ரீ தேவி ரங்கராஜா } வள்ளி



# சிறுவர் பகுதி



மிருத்யு

## பறக்கும் பணம்



ஆனந்த புரியை அச்சுதவர்மன் ஆண்டு வந்தான். அவனிடம் பெரிய பொக்கிஷம் இருந்தது. ஆனால் அது காலி! ஏன் தெரியுமா? அவன் அதில் கொட்டும் பணமெல்லாம் மறுநாள் பார்த்தால் காணப்படுவதில்லை. அதன் காரணம் அவனுக்கு விளங்கவே இல்லை. பொக்கிஷ அறை இரும்பாலானது அறைக்குள் திருடர் நுழைவது என்பது முடியாத காரியம். பலமான பந்தோபஸ்து உண்டு உள்ளே வெளிச்சத்திற்காக நாலைந்து துவாரங்கள்தான் உண்டு அதற்கு.

அச்சுதவர்மனுக்கு ஒரே வியப்பாக இருந்தது. எப்படி இதில் கொட்டும் பொன் நாணயங்கள் மாயமாய் மறைகிறது என்று தெரியவில்லை அரசன் இதே கவலையிம் இருக்கும்போது நமது சித்திரக்குள்ளன் அங்கு தோன்றினான். அரசனின் கவலையைக் கேட்டான். உடனே " அரசே தாங்கள் கவலைப்பட வேண்டாம் இன்னும் நான்கு நாளில் நான் அதைக்கண்டுபிடித்து விடுகிறேன். நீங்கள் இன்று பணம் அளந்து கொட்டும்போது பொக்கிஷ அறைக்கு என்னையும் கூட்டிப் போங்கள் " என்றான்.

குள்ளன் சாமர்த்தியம் அரசனுக்குத் தெரியும். இதேபோல் அனேக தடவைகளில் அவன் அரசனின் கவலையைத்தீர்த்திருக்கிறான்

மறுநாள் குள்ளனுடன் அரசர் பொக்கிஷ அறைக்குப் பணமளக்கச் சென்றார். மூட்டை மூட்டையாகப் பணத்தை அளந்து கொட்டினார்கள். கணக்குப் பார்த்த பிறகு அரசர் கிளம்பத்தயாரானார். மறுநாள் இவ்வளவு பணமும் காணாமல் போகப்போவதை நினைத்தபோது அவருக்கு வருத்தமும் கோபமும் மாறிமாறி வந்தது. குள்ளனைப்பார்த்தார் அவன் காணப்படவில்லை. சுற்றுமுற்றும் தேடினார். பதிலில்லை. 'பிறகு எங்காவது வெளியே போயிருப்பான்' என்று அறையைப் பூட்டிக்கொண்டு கிளம்பிவிட்டார்.

குள்ளன் எங்கும் போகவில்லை. அந்த அறைக்குள்ளேயேதான் ஒளிந்து கொண்டிருந்தான். பணம் எப்படிக் கால் முளைத்துப்போகிறது என்பதைப் பார்க்க வெகு நேரம் காத்திருந்தான். கொட்டாவி கூட வந்துவிட்டது. திடீரென்று படபடவென்ற பெருத்த ஓசை கேட்டது வெளிச்சம் வருவதற்காக வைத்திருக்கும் துவாரத்தின் வழியாக பறவைகள் கூட்டங் கூட்டமாக—நூறு, ஆயிரமாக— வந்து கொண்டே இருந்தன. குள்ளன் பார்த்துக்கொண்டிருக்கும் போதே ஒவ்வொரு பறவையும் ஒரு பொன் காசைக் கொத்திக் கொண்டு பறந்துவிட்டன.

குள்ளனுக்கு இது ரொம்ப ஆச்சர்யமாய் இருந்தது. பறவைகள் தானியத்தை அல்லவா சாப்பிடும். அவனுக்குஇது ஒரே புதிராகஇருந்தது. யோசனையில் இருக்கும் போதே மறுபடியும் பறவைக்கூட்டம் வந்துவிட்டது. இந்தத் தடவை குள்ளன் யோசித்துக்கொண்டிருக்கவில்லை. சடாரென்று ஒரு பெரிய கழுகின் காலைப் பிடித்துக் கொண்டான். இவைகள் இவ்வளவு ஒற்றுமையுடன் பொன்னை எடுத்துக்கொண்டு எங்கே போகிறது என்று பார்க்க வேண்டாமா? பறவைகள் வெகு வேகமாகப் பறந்து சென்றன. குள்ளன் அவைகள் போகும் வழியைப் பார்த்துக் கெண்டே சென்றான். எல்லாப் பறவைகளும் போய் ஒரு பெரிய மாடியில் இறங்கியவுடன் தாங்கள் கொத்தி வந்திருக்கும் பணத்தை எல்லாம் கீழேபோட்டது. உடனே ஒருவன் அவைகளை எல்லாம் பொறுக்கிக்கொண்டான். மற்றொருவன் அவைகளுக்கு கூடை கூடையாகத் தானியங்களைத்தூவினான். வயிறு நிரம்பத்தின்றபின் அவை கூண்டிலடைக்கப்பட்டன.

இதை யெல்லாம் பார்த்துக் கொண்டே இருந்தான் குள்ளன் மாடியில் ஒளிந்து கொண்டு. பணத்தை எல்லாம் பொறுக்கிச் சேர்த்து வைத்துக் கொண்ட மனிதனைப் பார்த்தபோது அவனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

உடனே அரசரிடம் ஓடிவந்தான் "அரசே உங்கள் பொக்கிஷ பணம் கால் முளைத்துப் போகவில்லை இறகு முளைத்துத்தான் பறந்து போகிறது அந்த விந்தையையும் கண்டுபிடித்து விட்டேன். உங்கள் பணம் அவ்வளவும் பொக்கிஷ அறைக்காவலாளி வீட்டில் இருக்கிறது. அவரிடம் பழக்கப்பட்ட பறவைகள் ஆயிரக் கணக்கில் இருக்கின்றன. அவர் இங்கு பணமளந்து கொட்டுவதை அறிந்த உடன் தன் வீட்டிற்குப் போய் கூண்டிலிருந்து பறவைகளைத் திறந்துவிட்டு விடுகிறார். அவைகள் அறையின் துவாரத்தின் வழியே உள்ளே நுழைந்து ஒவ்வொன்றாகக் கொத்திக் கொண்டு போய் அவரிடம் சேர்ப்பித்துவிடுகின்றன. இதுதான ரகசியம் என்றான் குள்ளன் உடனே காவலாளி வீடு சோதிக்கப்பட்டது, அவ்வளவு பொருளும் கைப்பற்றப்பட்டது. காவலாளியை ஜெயிலில் போட்டார்கள். பறவைகளை எல்லாம் கூண்டிலிருந்து விடுவித்துப் பறக்க விட்டு விட்டார்கள்.

"ஏன் அண்ணா அப்போ அந்தப் பறவைகள் எல்லாம் இனி எங்கே காசு கிடந்தாலும் கொத்திக் கொண்டுவந்து ராஜா கிட்டக் கொடுத்துடுமோன்னோ?

'போடா அதிகப்பிரசங்கி'

"ஏன அண்ணா நீ இத்தனை நாழி அளந்ததுக்கு என் அளப்பு குறைஞ்சு போச்சோ?"

என் ஓங்கிய கைக்குள் அகப்படுவானா அந்த எமப்பயல்!



விழுந்துபோன பாலத்தின் 700டன் நிறையுள்ள ஒருபகுதியை புனருத்தாரண வேலைகளின்போது ஜேர்மனியர் 90 நிமிஷங்களில் சீர்ப்படுத்திய காட்சி.

## முக்குலத்தார் நடுத்தரப்பள்ளி திருவரம்பூர்

சென்ற 2-3-46ந்தேதி ஞாயற்றுக்கிழமை மாலை 5½ மணிக்கு திருவரம்பூர் முக்குலத்தார் நடுத்தரப்பள்ளியில், ஷை பள்ளி நிர்வாகஸ்தர்களால் " திருச்சி நகராண்மைக் கழகத் தலைவர் திரு பி. ஆர். தேவரவர்கள் சென்னை சட்டசபை அங்கத்தினராக போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டமைக்கு நன்றியும் பாராட்டுதலும், தெரிவிக்கப்பட்டு அன்னவருக்கு ஒரு சிறந்த தேனீர் விருந்து அளிக்கப்பட்டது.

இப்பள்ளி குறுகிய காலத்தில் ஆரம்பிக்கப்பெற்றிருந்தும், அது அடைந்திருக்கும் வளர்ச்சியைப் போற்றியும், பணக்காரர்களை, வேண்டிக்கொண்டும், பள்ளித் தலைவர் டி. பி. வேதாசலம், கோதண்டபாணி மூவரையர், என். பி. மாணிக்கம், டி. டி. தங்கராஜ் ஆகியோர் நீண்ட நேரம் சொற்பொழிவாற்றினார்கள்.

இப்பள்ளிக்கூடம் அமைக்க நிலம் நன்கொடையாக கொடுத்த மே. சு. நடேசம்பிள்ளை அவர்கள் படமும், பெரு நன்கொடையாளர் கூத்தப்பிள்ளை, எம். பழனியாண்டி சோமாநாயக்கர் அவர்கள்படமும், பள்ளியில் திறந்து வைக்கப்பட்டன.

திரு. பி. ஆர். தேவர் அவர்கள் தனக்குப் பள்ளிக்கூட நிர்வாகஸ்தர்கள் வரவேற்பு, நல்வாழ்த்து, கூறியமைக்கு நன்றி செலுத்துவதாகவும், இப்பள்ளி முன்னேற்றத்திற்கான வேலைகளில், இனி தீவிரமாக ஈடுபடுவதாகவும், சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பெற்று தான் வந்ததற்கு அறிகுறியாக முதல் முதலாக பல பெருமக்களை கொடுமைப்படுத்திவரும் ஸி. டி. ஆக்ட் என்னும் கொடும் சட்டத்தை தகர்த்தெறிவதாகவும், விவரமாகப்பேசினார். இரவு 8 மணிக்கு சங்கக் காரியதரிசி என். பி. மாணிக்கம் அவர்களால் நன்றிகூறிக் கூட்டம் முடிவு பெற்றது.

## ஸ்ரீ டி. என். இராஜரெத்னம் பிள்ளையின் கச்சேரி

திருவாவடுதுறை ஆதீனம் பிரதம சங்கீத வித்வான் நாதஸ்வர ஏகசக்ராதிபதி டி. என். இராஜரெத்னம் பிள்ளை தமது பார்ட்டியுடன் நாளது பங்குனிமீ 25உ முதல் 29உவரையில் விருதுநகரில் நாதஸ்வரக் கச்சேரி நடத்துவார்.

# லக்ஷ்மி குறுக்கு எண் போட்டி

6, 7 & 8 போட்டிகளுக்கு

ஸ்பெஷல் பரிசுத் திட்டம் ரூபாய் 7250 போனஸ்

ஒவ்வொன்றுக்கும் பரிசு ரூ 1500 முதல் பரிசு ரூ 1000 2ம் பரிசு ரூ 500

# லக்ஷ்மி குறுக்கு எண் போட்டி 6

லக்ஷ்மி குறுக்கு எண் போட்டி **6, 7, 8** இந்த மூன்றிலும் கலந்துகொண்டு வெற்றிபெறும் நேயர்களுக்கு விசேஷ போனஸ் பரிசுகள் பின்வருமாறு வழங்கத் தீர்மானித்திருக்கிறோம். போனஸ் பரிசுகளுக்கு உரியவர்களைத் தேர்ந்தெடுத்தலும் பரிசு வழங்குதலும் இந்த மூன்று போட்டிகளும் முடிவடைந்து முடிவுகள் வெளியான பிறகே நடைபெறும்.

## முதற் பரிசுக்கு போனஸ்

1. இந்த மூன்று போட்டிகளிலும் முதல் பரிசு பெறுபவர்களுக்கு பரிசுத் தொகையுடன் ஸ்பெஷல் போனஸாக ரூ. 1,000 ரொக்கம் தரப்படும்.
2. இம்மூன்று போட்டிகளில் ஏதாவது இரண்டில் மட்டும் முதல் பரிசு பெறுபவர்களுக்கு பரிசுத் தொகையுடன் ஸ்பெஷல் போனஸாக ரூ. 600 ரொக்கம் தரப்படும்.
3. இம்மூன்று போட்டிகளில் ஏதாவதொன்றில் மட்டும் முதல் பரிசும் மற்ற இரண்டில் இரண்டாம் பரிசும் பெறுபவர்களுக்கு பரிசுத் தொகையுடன் ஸ்பெஷல் போனஸாக ரூ. 500 ரொக்கம் தரப்படும்.

## இரண்டாவது பரிசுக்கு போனஸ்

4. இந்த மூன்று போட்டிகளிலும் இரண்டாவது பரிசுபெறுகிறவர்களுக்கு பரிசுத் தொகையுடன் ரூ. 400 ரொக்கம் ஸ்பெஷல் போனஸாகத் தரப்படும்.
5. இந்த மூன்று போட்டிகளில் ஏதாவது இரண்டில் மட்டும் இரண்டாம் பரிசுபெறுகிறவர்களுக்கு பரிசுத் தொகையுடன் ஸ்பெஷல் போனஸாக ரூ. 250 ரொக்கம் தரப்படும்.
6. போனஸ் பரிசு முடிவுகள் வெளியான பிறகு யாராவது தாங்கள் போனஸ் பரிசுக்கு உரியவர் என்றும் ஆனால் தங்கள் பெயர் விட்டுப் போனதாகவும் தெரிந்தால் தங்களுக்கு உள்ள உரிமையை நிரூபித்து அதைப் பரிசீலனை செய்யும்பொருட்டு போட்டி ஆசிரியருக்கு ஒரு வாரத்திற்குள் மூன்று ரூபாய் பரிசீலனைக் கட்டணத்துடன் விண்ணப்பம் செய்யலாம். அப்படி செய்யப்படும் பரிசீலனையிலும் மற்றும் இது சம்பந்தமான சகல விஷயங்களிலும் போட்டி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானதும் சட்டப்படி கட்டுப்படுத்துவதுமாகும்.
7. விதிகளுக்கு உட்படாததாகக் கருதப்படும் எந்தக் கூப்பனையும் உரிமையையும் நிராகரிக்கப் போட்டி ஆசிரியருக்கு உரிமையுண்டு.
8. போனஸ் பரிசுகள் எதிலாவது ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் வெற்றி பெற்றால், பரிசுத்தொகையைப்போலவே போனஸ் தொகையும் சமமாகப் பகிர்ந்தளிக்கப்படும்.
9. ஒருவர் ஒரு போனஸ் மட்டுமே பெறத் தகுதியுண்டு

**இடமிருந்து வலம்**

1. இருபது
4. பதினொன்று
6. ஒன்பது
7. பதினொன்று
8. பத்து
13. நான்கு
15. பன்னிரண்டு
16. ஒன்பது
17. பதினொன்று
18. நான்கு
19. இருபத்தொன்று
20. பதினொன்று
21. ஏழு
23. பத்தொன்பது
24. பதிமூன்று

**மேலிருந்து கீழ்**

2. பதினேழு
3. பதினைந்து
4. ஐந்து
5. ஏழு
6. எட்டு
7. பதிமூன்று
9. எட்டு
10. பத்தொன்பது
11. பன்னிரண்டு
12. இருபது
14. இருபத்திஐந்து
15. பதினேழு
16. இருபத்தொன்று
17. பதினொன்று
18. ஒன்பது
19. பன்னிரண்டு
22. பதினான்கு

நெ. 5, அலக்ஸாண்ட்ரா ரோட், கண்டோன்மெண்ட், திருச்சி.

**முடிவு தேதி 27—4—46**

**பிரவேசக்கட்டணம் :—கூப்பன் 1க்கு 8 அணா. 2 கூப்பன் ரூ. 1. ஒவ்வொரு 3 கூப்பன்சேர்ந்த செட் 1க்கு ரூ. 1/4**

ஒரு கூப்பன்மட்டும் அனுப்புவோர் ஒன்றைமட்டும் பூர்த்திசெய்து மற்ற இரண்டையும் காலியாக அனுப்பவேண்டும். 27—4—46க்குள் நமக்குக் கிடைக்கும்படி கூப்பன்களை அனுப்பவேண்டும்.

1. அடித்தல் திருத்தலின்றி மையினால் பூர்த்திசெய்யவும். ஒரு கட்டத்தில் ஒரு எண் மட்டுமே உண்டு. எந்தக்கட்டமாவது பூர்த்திசெய்யப்படாமலிருந்தால் கணக்கில் சேராது.
2. தி திருச்சினாப்பள்ளி திருநிதி பாங்கில் சீல்செய்துகொடுக்கப்பட்டிருக்கும் ஆசிரியரின் விடைக்கு எண்ணுக்கு எண் சரியான விடைக்கு முதல் பரிசு. ஒன்றுக்கு மேற்பட்ட சரியான விடைகள் வந்தால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும். ஒருவர் ஒரு பரிசுமட்டுமே பெறத் தகுதியுண்டு.
3. கட்டணங்களை மணியார்டரிலோ பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டாகவோ அனுப்பி, அதற்கு அத்தாட்சியாக ரசீதுகளை கூப்பனுடன் அனுப்ப வேண்டும். தவறினால் கூப்பன்கள் தள்ளுபடி செய்யப்படும்.
4. தவறியோ, கிழிந்தோ போனாலும், தாமதித்து வந்தாலும் கூப்பன்களுக்கு நாங்கள் ஜவாப்தாரியல்ல.
5. போட்டியில் கலந்துகொள்வோர், தங்கள் கூப்பன்களை சரிவர பரிசீலனை செய்யாது பரிசு கிடைக்கவில்லையென்று சந்தேகித்தால், ரூ. 3 பரிசீலனைக் கட்டணமாக போட்டி விடை பிரசுரித்த ஒரு வாரத்திற்குள் அனுப்பினால் அவர்கள் அனுப்பிய கூப்பன் நகலைத் தபாலில் அனுப்புவோம். பரிசீலனை கட்டணமில்லாத கடிதங்கள் நிராகரிக்கப்படும்.
6. கட்டணங்களை எக்காரணத்தாலும் வாபஸ்செய்யவோ வேறு கணக்கில் வரவு வைக்கவோ முடியாது. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**1 முதல் 9 எண்கள் உபயோகிக்கவும்.** **இதன் கீழே கத்தரிக்கவும்**



COMPETITION No. 6.



COMPETITION No. 6.



COMPETITION No. 6.

போட்டி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானதும் சட்டப்படி கட்டுப்படுத்துவதும் ஆகும் என்றொப்புக்கொள்ளுகிறேன்.

பெயர்________________

விலாசம்________________

கூப்பன்கள்............

மணியார்டர், அல்லது போஸ்டல்ஆர்டர் ரசீதுகள் நெ.............

சரியான விடை

5-5—46 சிவாஜியில் வெளியாகும்

Printed at the Trichinopoly United Printers Ltd., Trichinopoly and Published by T. Sivagnanam (Editor).